4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11 மதுரை 20-12-73 வியாழன் மலர் 287

பதிவு எண்: எம். 8798



## 1 லட்சத்து 80 ஆயிரம் பேர் வேலை நிறுத்தம்.

பம்பாய், டிச. 17—

பம்பாயில் உள்ள மில் தொழிலாளர்கள் நேற்று (ஞாயிறு) ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

சம்பள உயர்வு உட்பட பல கோரிக்கைகளை வற்புறுத்தி நடத்த இந்த வேலை நிறுத்தத்தில், 58 மில்களைச் சேர்ந்த ஒரு இலட்சத்து 80 ஆயிரம் பேர் பங்கு கொண்டனர்.

### எதிரிகளிடமிருந்து தங்கள் தலைவனைக் காப்பாற்ற

# சென்னை தொழிலாளி வர்க்கம் நடவடிக்கை

## வி. பி. சிந்தனுக்கு கார் பரிசளிப்பு விழாவில் தோழர் பி. ராமமூர்த்தி பாராட்டு

சென்னை, டிச. 17—

**சென்னையில் தி. மு. க. ரவுடிகளின் கொலைவெறித் தாக்குதலுக்கு ஆளான தோழர் வி. பி. சிந்தனுக்கு கார் பரிசளிப்பு விழா நேற்று சிறப்பாக நடைபெற்றது.**

**காரின் சாவியை வி. பி. சி.க்கு அளித்து பேசிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் பி. ராமமூர்த்தி, தங்கள் தலைவனை எதிரிவர்க்கத்திடமிருந்து பாதுகாக்க சென்னைத் தொழிலாளிவர்க்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைக்கு நன்றி தெரிவித்தார்.**

**தோழர் ராமமூர்த்தி தமது உரையில், உழைக்கும் தொழிலாளர்களை அடக்குவதில், அவர்கள் மீது வன்முறைகளை கட்டவிழ்த்துவிடுவதில் காங்கிரசும் தி மு கவும் ஒன்றுதான் என்று குறிப்பிட்டார்.**

வாகன வசதியின்றி அரசு பஸ் ஒன்றில் சென்று கொண்டிருக்கையில் தோழர் வி. பி. சிந்தன் குத்தப் பட்டதால் அது போன்ற நிலை மீண்டும் ஏற்படாமலிருக்க தங்கள் தலைவருக்கு கார் அளிப்பதென்று முடிவு செய்து சென்னை - செங்கை தொழிலாளி வர்க்கம் நிதி திரட்டி கார் வாங்கியது.

காரை. தோழர் வி. பி. சி.க்கு அளிக்கும் விழா நேற்று சிம்சன் தொழிற் சங்கக் கட்டிடத்தில் நடைபெற்றது.

முன்னாள் மேயர் எஸ். கிருஷ்ணமூர்த்தி தலைமை வகித்தார்.

தோழர்கள் அரிபட், ராஜகோபால், பி. ஆர். பரமேஸ்வரன், குசேலர், உமாநாத், பாப்பா உமாநாத் ஆகியோர் விழாவில் பேசினர்கள். இறுதியில் வி. பி. சிந்தன் நன்றிதெரிவித்துப்பேசினார்.

தோழர் ராமமூர்த்தி தொடர்ந்து பேசும்போது கூறியதாவது:—

இன்று நமக்கெல்லாம்ஒரு மகிழ்ச்சியானதினம்.நான்கு மாதங்களுக்கு முன் சிந்தன் தாக்கப்பட்டார், அவர் பிழைப்பாரா என்று நாம் கவலையோடு இருந்தோம். அவர் புனர்ஜென்மம் எடுத்திருக்கிறார். அவரைப் பொறுத்தவரை மறுபிறப்பு.

மீண்டும் அவர் அந்த நிலைக்கு ஆளாகக்கூடாது என்று கார் அளித்த உங்களுக்கு நன்றிதெரிவித்துக் கொள்கிறேன். அவருக்கு வைத்தியம் பார்த்த டாக்டர் உமாபதிக்கும்என் நன்றி.

### தியாகமே மூலதனம்

தொழிற் சங்க இயக்கத்தை வளர்க்க தியாகங்கள்தேவைப் படுகின்றன. குருதியைக் கொட்டித்தான்—உதிரத்தைக் கொடுத்துத்தான் ரத்தம் சிந்தித்தான் தொழிற்சங்க இயக்கம் வளர்ந்தது.

சிம்சன் போராட்டத்தின் போதும், எம். ஆர். எப். போராட்டத்தின் போதும் ரத்தம் சிந்தியேஇயக்கத்தை நடத்தினோம்.

இந்த நாட்டில் உள்ள அரசு, தொழிலாளர்களுக்கு விரோதமான து.1971ம் ஆண்டு தேர்தல் முடிந்தது. இந்திராகாந்தி தொழிற்சங்க தலைவர்களின் மாநாட்டை கூட்டினார்.

### ஒற்றுமை

அந்த மாநாட்டில் பேசிய பிரதமர் இந்திரா காந்தி இரண்டு விஷயங்களைச் சொன்னார். 5 ஆண்டுகளுக்கு 'ஸ்டிரைக்' செய்வதில்லை'என்றஉறுதி அளிக்க வேண்டும். சம்பள உயர்வு கோரக்கூடாது என்றும் அவர் கோரினார்.

அந்த மாநாட்டில் கலந்து கொண்ட நாம் சம்பள உயர்வு வேண்டாம் விலைவாசி உயர்வை நிறுத்துங்கள்' என்று சொன்னோம். விலைவாசி உயர்வை தடுத்து நிறுத்த முயற்சிப்பதாக பிரதமர் பதில் அளித்தார். நாங்களும் முயற்சி செய்வதாக பதில் அளித்தோம்.

(சிரிப்பு)

இப்படிப்பட்ட நிலைக்கு நம்மை ஆட்படுத்த கடந்த 3 ஆண்டுகளாக முயற்சி செய்யயபட்டது. அதை நாம் முறியடிப்போம்,

(கைதட்டல்)

இப்படி ஒன்றுபட்டு தொழிலாளி வர்க்கம் இருப்பதைப் பார்த்து அடக்குமுறையினை ஏவிவிட்டார்கள். பிளவு முயற்சிகளில் ஈடுபட்டார்கள் அதற்கு நமது பதில் ஒற்றுமை என்பதே.

(கைதட்டல்)

நமதுவழிக்குத்தான்வெற்றி இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்கும் யுத்தம் நின்று எவ்வளவோ காலம் ஆகிவிட்டது, ஆனல் இன்னும் பாதுகாப்புச் சட்டம் அமுலில் இருக்கிறது. ஏன்? தொழிலாளிகள் போராடும் போது அடக்குவதற்காகவே இதுநீடிக்கப்பட்டுவருகிறது சிம்சன் போராட்டத்தின் போது டி. ஐ. ஆர். பயன்படுத்தினார்கள்.

### ஒன்றுதான்

இந்தியா முழுவதும் தொழிலாளர்கள்மீதும் தொழிற் சங்கங்கள் மீதும் தொழிற்சங்கத் தலைவர்கள் மீதும் அடக்குமுறை எவிவிடப்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டிலும் அதே நிலைமைதான், தமிழ்நாட்டில் உள்ள தி. மு. கழக அரசும் காங்கிரஸ் வழியில்தான் நடக்கிறது. அடக்குமுறையில் காங்கிரசும் தி. மு. கழகமும் ஒன்றுதான்.

### நெருக்கடி

நாட்டை மிகப் பெரிய நெருக்கடி எதிர்நோக்கியிருக்கிறது. ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறப் போவதில்லை 51 ஆயிரம் கோடி ரூபாய் வேண்டும்,அதற்குப் பிச்சை எடுக்க வேண்டும். இனி இந்தியாவை நம்பி எந்த நாடும் கடன் கொடுக்காது.

நெருக்கடியான இந்த நிலையில் போராட்டப்பாதையில் செல்ல நாம் அனைவரும் ஒன்றுபடுவோம். தொழிற்சங்க இயக்கம் என்பது வெறும் சம்பளப் போராட்டமாக இல்லாமல் வர்க்கப் போராட்டமாக அமைய வேண்டும்.

இவ்வாறு பி. ராமமூர்த்தி பேசினார்.

## சென்னை சி ஐ டி யூ மாநாட்டுக்கு ஆயிரமாயிரமாய் அணிதிரள்வீர் மின் தொழிலாளர்களுக்கு அறைகூவல்

மதுரை, டிச. 17—

சென்னையில் நடக்கவிருக்கும் சி ஐ டி யூ மாநாட்டுக்கு மின்வாரியத் தொழிலாளர்கள் ஆயிரமாயிரமாய்அணிதிரண்டு வர வேண்டுமென்று தமிழ்நாடு மின்வாரியத் தொழிலாளர் சங்க உபதலைவர் கேவாசுதேவன் அறைகூவல் விடுத்துள்ளார்:

இதுகுறித்து, அவர் விடுத்துள்ள அறிக்கையில் குறைந்தபட்ச தேவை அடிப்படையிலான சம்பளம் ரூ 350, உயரும் ஒவ்வொரு புள்ளிக்கும் 37 காசு பஞ்சப்படி, மின் வாரியத்தில் உள்ள மொத்த நிரந்தரப் பதவிகளை நிர்ணயிப்பது, சம வேலைக்குச் சம சம்பளம் 8 மணி நேர வேலை முதலிய 20 அம்சக் கோரிக்கைகளை பெறுவதற்கான போராட்டத்திற்கு அனைத்து மின் தொழிலாளர்களும் சங்க, கட்சி வேறுபாடின்றி ஒன்றுபட வேண்டும்.

உரிமைகளுக்காகப் போராடுகின்ற உழைப்பாளி வர்க்கத்திற்கு வழிகாட்ட உறுதிமிக்க கூட்டுப் போராட்டங்களுக்குத்திட்டமிட அரசின் தொழிலாளர் விரோதக் கொள்கைகளுக்கு எதிராக போர் பிரகடனம் செய்ய சென்னையில் டிச-20 தேதி முதல் 23ந் தேதிமுடிய சி ஐ டி யூ வின் தமிழ் மாநில மாநாடு கூடுகிறது. அந்த மாநாட்டின் இறுதி நாளில் நடக்கும் பேரணியில் கலந்து கொள்ள சிறப்பு மிக்க மின் தொழிலாளர்கள் ஆயிரமாயிரமாய்அணிதிரண்டு சென்னை நோக்கி வரவேண்டும்;

இவ்வாறு அந்த அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது.

## கூலிஉயர்வு போனஸ் கோரி 10 ஆயிர நெசவாளர்கள் வேலை நிறுத்தம்

மதுரை, டிச.16—

மதுரை செல்லூர் பகுதியிலுள்ள சுமார் 10 ஆயிரம் கை நெசவுத் தொழிலாளர்கள் 50 சதவிகித கூலி உயர்வும், 15 சதவிகித போனஸ் கோரியும், வேலை நிறுத்தம் செய்துள்ளார்கள்.

இந்தப் போராட்டத்தில் என்றுமில்லாத —ஒன்று கைத்தறி குமாஸ்தாக்கள் சங்கமும்,கலந்து கொண்டு வேலைநிறுத்தம் செய்கிறார்கள். பலதடவைகள் பேச்சு வார்த்தைகள் நடத்தியும் பலன் கிடைக்காததால், இந்த வேலைநிறுத்தத்தை அனைத்து தொழிலாளர்களும் அனைத்து தொழிற் சங்கங்களும் ஏகமனதாக சேர்ந்து இந்த வேலைநிறுத்தில் கலந்து கொள்கிறார்கள்.

# தோழர் முஜாபர் அகமத்

கல்கத்தா, டிச. 18—

**தோழர் முசாபர் அகமது காலமானர். கம்யூனிஸ்ட் கட்சியின் பழம்பெரும் தலைவரான—இந்திய கம்யூனிஸ்ட் இயக்க சிற்பிகளில் ஒருவரான—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினரான தோழர் முசாபர் அகமத் அவர்களை நாம் இழந்துவிட்டோம்.**

நீண்ட நாட்களாகவே நோய்வாய்ப்பட்டு, படுத்த படுக்கையில்கிடந்த தோழர் முசாபர், இறக்கும் போது அவருக்கு வயது 84.

1889-ம் ஆண்டு கிழக்கு வங்காளத்திலுள்ள நவகாளி மாவட்டத்தில் 'சாண்ட்விப்' என்ற கிராமத்தில் ஒரு ஏழை முஸ்லீம் குடும்பத்தில் பிறந்தார் தோழர் முசாபர் அகமது.

"எனது குடும்பம் மிகவும் ஏழைக் குடும்பம். எனவே எனது குடும்பத்தினர் என்னுடைய பிறந்த நாளை கொண்டாடுவதில்லை. எனவே எனது சரியான பிறந்தநாள் பற்றி எனக்கு நினைவில்லை" என்று தோழர் முசாபர் அகமது குறிப்பிட்டுள்ளார்.

தோழர் முசாபரின் தந்தையார் பெயர் மன்சூர் அலி; தாயார் சூனுபீபி அம்மையார்.

தோழர் அகமது இன்டர் மீடியட் வரையிலும் கல்வி பயின்ற பின்னர் தமது 18-வது வயதிலேயே முழு நேர சமூகப்பணியாளராக மாறினார்.

'அன்றிலிருந்து இன்று வரையும் நான் முழுநேர சமூகப் பணியாளனே' என்று தோழர் அகமது தமது புத்தகத்தில் கூறியுள்ளது கவனத்துக்குரியது.

### பல்லாண்டுகள் சிறைவாசம்

தோழர் முசாபர் அகமது கான்பூர் போல்ஷெவிக் சதி வழக்கிலும் (1924), மீரட் சதி வழக்கிலும் (1929-33) உட்படுத்தப்பட்டு வெள்ளையர் ஆட்சியால் பல்லாண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டார்.

மேலும் அவர் வெள்ளையர் ஆட்சியாலும், காங்கிரஸ் ஆட்சியாலும் பல்வேறு கால கட்டங்களில் சிறை படுத்தப்பட்டிருக்கிறார்.

'நவயுக்', 'லங்கல்'. 'கனபானி' போன்ற புரட்சிகர ஏடுகளின் ஆசிரியராகவும் தோழர் முசாபர் அகமது பணியாற்றியுள்ளார்.

புரட்சிக் கவிஞன் காசி நஸ்ரூல்இஸ்லாம் வாழ்க்கை வரலாற்றையும் தோழர் அகமது வங்கமொழியில் புத்தகமாக வெளியிட்டுள்ளார்.

"நானும் —இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (1920-29)யும்" என்ற தோழர் முசாபர் அகமது எழுதிய நூல் ஆரம்ப கால கமயூனிச இயக்க வரலாற்றை விரிவாக எடுத்துக் கூறும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பெட்டகமாகும்.

### பேரிழப்பு

தனது வாழ்க்கை முழுதையுமே புரட்சிகர இயக்கத்துக்கு-மக்கள்சேவைக்கு கமயூ. இயக்கத்திறகு அர்ப்பணித்தார்-

தமதுவாழ்வை ஒரு ஆதர்சமாக மாற்றிய அந்த மாபெரும் புரட்சியாளனின் மறைவு ஈடுசெய்ய முடியாத ஓர் பேரிழப்பாகும்.

## மாணவர் சங்கத் தலைவர் செ. பழனியப்பன் மீது ரவுடிகள் தாக்குதல்

தர்மபுரி. டிச. 18—

இந்திய மாணவர் சங்கத்தின் (எஸ். எப். ஐ) தமிழ் மாநிலக் குழு உறுப்பினரான தோழர் செ. பழனியப்பனை ரவுடிகள் தாக்கிப் படுகாயப்படுத்தியுள்ளனர். இந்தத் தாக்குதல் கடந்த 13-ந் தேதி நடந்துள்ளது. இது பற்றிய செய்தி வருமாறு:—

தர்மபுரி தட்டெழுத்துப் பயிற்சி மாணவிகள்இருவர், விடுதியை விட்டு நீக்கப்பட்டது சம்பந்தமாக மாவட்டக் கலெக்டரைச் சந்தித்து பேசுவதற்கு கடந்த 17 ந் தேதி காலை 12 மணியளவில் தர்மபுரி பஸ் நிலையத்தில் மாணவ மாணவிகளுடன் தோழர் பழனியப்பன் நின்று கொண்டிருந்தார். அப்போது தர்மபுரியைச்சேர்ந்த கந்துக்காரரும் ரவுடியுமான முனியப்பனும், அவரைச் சார்ந்த கும்பலும் மாணவிகளை — அவர்களை சாதிப் பெயரைச் சொல்லியும் மற்றும் ஆபாசமான கீழ்த்தனமான வார்த்தைகளாலும் திட்டினார்கள். ஏன் இவ்வாறு திட்டுகிறீர்கள். என்று கேட்டதற்காக தோழர் பழனியப்பனை அந்த ரவுடிக் கும்பல், பலத்த காயம் ஏற்படும் அளவுக்கு கடுமையாகத் தாக்கியுள்ளனர்.

ரவுடிகளின் இத் தாக்குதல் குறித்து, தர்மபுரி காவல் நிலையத்திலிருக்கும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் இந்திய மாணவர் சங்கமும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் புகார்கள் கொடுத்துள்ளன.

## கல்கத்தாவில் காங்கிரஸ் மாணவர்களிடையே மோதல்

### உயிருக்கு பயந்து ஒருவர் மறைவு

கல்கத்தா, டிச. 17—

மேற்கு வங்க காங்கிரஸ் மாணவர்களிடையே (சத்ர பரிசத்) ஏற்பட்ட கோஷ்டி சண்டையால் உயிரைக் காப்பாற்றும் பொருட்டு சுஷாகாந்தி என்றஎம் காம் மாணவர் ஒருவர் காணமல் போய்விட்டார்.

### ஹாஸ்டல் மூடப்பட்டது.

கல்கத்தா பல்கலைக்கழக சத்ரபரிசத் மாணவர்களிடையே கோஷ்டி சண்டை ஏற்பட்டு சத்ரபரிசத்திலிருந்து கல்வியை காப்பாற்றும் அணி என்றும்கோஷ்டி ஏற்பட்டது.

இக்கோஷ்டிகளின் மோதலால் ஹாஸ்டல்களை மூடவும், வெளியிலிருந்து வருபவர்களை ஹாஸ்டலுக்குள் வராமல் தடுக்கவும் பல்கலைக் கழக நிர்வாகம்முடிவு செய்துள்ளது,

இக்கோஷ்டி சண்டையின் அடைப்படையில்சத்ர பரிசத்தைச் சேர்ந்தவர்களின் தாக்குதலுக்குப் பயந்து கல்வி காப்பாற்றும் அணியைச் சேர்ந்த எம் காம் மாணவர் சுஷாகாந்தி டட்டா என்பவர் எங்கோ சென்றுவிட்டார்.

போலீஸ் அவரை இன்னும் தேடிக்கொண்டிருக்கிறது என்றும் பல்கலைக் கழக ஹாஸ்டலில் இன்னும் போலீஸ் நிறுத்தப்பட்டிருக்கிறது என்றும் டெபுடி கமிஷனர் தெரிவித்தார்.

பல்கலைக் கழக மாணவர்களின் ஒழுங்கு மத்தியக் கமிட்டியானது, மறைந்து போன மாணவர் கண்டு பிடிக்கப்படும்வரைஸ்டிரைக் நடக்கும் என தெரிவித்துள்ளது.

## லோக்சபையில் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் வெளிநடப்பு

புதுடெல்லி, டிச. 18—

பார்லிமெண்ட் கூட்டம் ஆரம்பமாகும் காலத்தில் கூட, பார்லிமெண்ட்டைக் கலக்காமல் பொது மார்க்கெட்டில் விற்கப்படும் சீனிக்கு 7½ சதவீதஎக்சைஸ் வரி விதித்ததைக் கண்டித்து எதிர்க்கட்சி உறுப்பினர்களனைவரும் வெளிநடப்பு செய்தனர்.

எதிர்க்கட்சி உறுப்பினர்களின் கடும் எதிர்ப்பால் பார்லிமெண்ட் 35 நிமிட நேரம் கடும் சப்தம் நிரம்பியதாக இருந்தது. பார்லிமெண்ட் நடைமுறையை மீறியதற்காக சம்பந்தப்பட்ட அமைச்சர் பார்லிமெண்டில் மன்னிப்புகேட்க வேண்டும் என்றும் கோரப்பட்டது.

உத்தரப்பிரதேச தேர்தலுக்கு சீனியாலை முதலாளிகளிடமிருந்து நிதி பெறவே இவ் வுத்தரவை பார்லிமெண்டிற்கு தெரிவிக்காமலே போடப்பட்டுள்ளது என்றும் குற்றம் சாட்டப்பட்டது.

அரசாங்கத்தின் இந் நடவடிக்கை பார்லிமெண்டை அவமானப்படுத்தி விட்டது என்றும் அரசியல் சட்டத்திற்கே விரோதமானது என்றும் எதிர்க்கட்சி உறுப்பினர்களால் கூறப்பட்டது.

### வெளிநடப்பு

விவசாய அமைச்சர் பக்ருதின் அலி அகமது தனக்கு பார்லிமெண்டை அவமானப்படுத்தும்நோக்கோடு பார்லிமெண்டுக்குத் தெரிவிக்காமல் பொது மார்க்கெட் சீனி மீது 7½ சத வீத வரி விதிப்பை செய்யவில்லை என்று கூறினர்.

அமைச்சரின் பதில் திருப்தி அளிக்காததால், எதிர்க்கட்சிகள் அனைவரும் லோக்சபாவிலிருந்து வெளிநடப்பு செய்தனர்.

## இரயில்வே அமைச்சரின் மிரட்டல்

புது டில்லி, டிச- 18—

லோகோ ஊழியர்களின் வேலை நிறுத்தத்தையொட்டி மீண்டும் பாதுகாப்பு விதிகளை பயன் படுத்த தயங்க மாட்டோம் என இரயில்வே துணை அமைச்சர் முகமது ஷாபிகுரேஷியா மிரட்டுகிறார். இந்த மிரட்டலை பார்லிமெண்டில் வெளியிட்டார்.

லோகோ ஊழியர்கள் கடந்த ஆகஸ்ட் மாதத்தில் நடத்திய பிரம்மாண்டமான போராட்டத்தின் போது கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றாமல், அவர்களை போராட்ட ஆயுதத்தை கையில் எடுக்கச் செய்து விட்டு பாதுகாப்பு விதியை காட்டி மிரட்டிப் பார்க்கிறார்.

### அமைச்சரின் ஆணவம்

லோகோ ஊழியர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு பதில் சொல்லாமல் "பொதுப் போக்குவரத்துகளுக்கு பங்கம் விளைவிக்கும் சமூகவிரோதிகளை" அடக்க பாதுகாப்பு விதிகளை விதிக்க தயங்க மாட்டோம்" என ஆணவத்தோடு கூறியிருக்கிறார்.

தீக்கதிர்

## காலம் தாழ்த்தாதீர்

அக்டோபர் 15-ம் தேதி துவங்கிய குமரி மாவட்ட அரசுப் போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டமும் 22-ந்தேதி துவங்கிய விக்ரமசிங்கபுரம் ஹார்வி மில் தொழிலாளர் போராட்டமும் இன்னும் நீடிக்கிறது.

ஹார்வி மில் தொழிலாளர்கள் இடைக்கால நிவாரணம் பழிவாங்கப்பட்ட தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளுதல், 8 நாள் சம்பளப்பிடித்தலை ரத்து செய்தல் போன்ற மிக நியாயமான 9 அம்சக் கோரிக்கைகளுக்காக வேலைநிறுத்தக்களத்தில் உள்ளனர்.

தொழிலாளர்களை சுரண்டுவது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள ஹார்வி மில் நிர்வாகம் மில்லை கதவடைப்பு செய்து தொழிலாளர்களின் தார்மீகப் போராட்டத்தை அலட்சியப்படுத்தியுள்ளது.

இந்தப் பிரச்சினை பற்றி சமரசப் பேச்சு நடத்துவதற்கு 8—12—73-ம் தேதி வரையிலும் லேபர் கமிஷனர் எடுத்த முயற்சியும் ஏற்றுக் கொள்ளவில்லையென்பது தொழிலாளர் போராட்டம் அரசுத்துறையில் வெடித்தாலும் தனியார் துறையில் வெடித்தாலும் அரசு தொழிலாளர்களுக்கெதிராகத்தான் செயல்படும் என்பதைத் தெளிவு படுத்துகிறது.

கதவடைப்பினுல் தொழிலாளர்களின் ஒற்றுமையை குலைக்க முடியாது என்பதை உணர்ந்து கொண்ட மில் நிர்வாகம் பிரச்சினையை நீதி விசாரணைக்கு விடுவதாக அறிவித்தது. அதன் பின்னரே அரசு தலையிட்டு 8—12—73-ம் தேதி நீதி விசாரணைக்கு உத்தரவிட்டுள்ளது.

ஆனல் இந்த உத்தரவில் தொழிலாளர்களின் முக்கியப் பிரச்சினைகளான இடைக்கால நிவாரணம் பழிவாங்குதல் ஆகியவை பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை.

அதாவது தொழிலாளர்களின் போராட்டத்தை சுமுகமாகத் தீர்த்துவைப்பதில் அரசுக்கு எந்த அக்கறையும் இல்லை.

இதையொட்டி ஹார்வி மில் தொழிலாளர்கள் மறியல் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். 'பாளையங்கோட்டை சிறை' மில் தொழிலாளர்களால் நிரம்பி வழிகிறது.

காலங்கடத்தி தொழிலாளர்களைப் பணியவைக்கலாம் என்ற நப்பாசையை கைவிடுமாறு மீண்டும் தமிழக அரசிடம் வற்புறுத்துகிறோம்.

மாதக் கணக்கில் தொழிலாளர்களின் போராட்டத்தை நீடிக்கச் செய்து அவர்களின் வாழ்க்கையோடு நடத்தும் விளையாட்டுக்கு இனியேனும் முற்றுப்புள்ளி வையுங்கள்.

ஹார்விமில் தொழிலாளர் வேலை நிறுத்தத்தையும். குமரி போக்குவரத்துத்தொழிலாளர் வேலைநிறுத்தத்தையும் இன்னும் காலங்கடத்தாமல் உடனடியாக சுமுகமாக முடித்துவைக்க தமிழக அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

## கொலுப் பொம்மைகளின் கூடாரமா?

நீண்ட காலமாகப் பேசிவரும் பிரச்சினைதான் மாநில அரசுகளின் அதிகாரங்கள் பற்றியும் மீண்டும் ஒரு தடவை பேசியிருக்கிறார்கள். உள்துறை அமைச்சர் உமா சங்கர் தீட்சித் தனது அமைச்சக ஆலோசனைக் குழுக் கூட்டத்தில் பேசியுள்ளார்.

இன்றுள்ள அரசியல் சட்ட அதிகாரப் பங்கிடே போதுமாம்.இதில் எந்த மாறுதலும் தேவையில்லையாம். மாநில சுய ஆட்சிக்கு எந்த ஆபத்து இல்லையாம்.

இக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் எம் பி தோழர் நிரேன் கோஷ் அவர்களால் ஒரு பிரச்சினை எழுப்பப்பட்டது.

மாநில கவர்னர்கள் என்பவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மாநில சட்டசபைக்கு உள்ள உரிமைகளை நாசம் புரிந்து வருகிறார்களே. இதைத் தடுக்கும் நடவடிக்கை எடுக்க வேண்டாமா?. உதாரணத்திற்கு சமீபத்தில் ஒரிசா கவர்னர் சட்டசபையைக் கலக்காமலேயே, மாற்று கட்சியினருக்கு மந்திரி சபை அமைக்கும்ஆதரவு இருக்கா இல்லையா என்பதைச் சோதித்துப் பார்க்காமலேயே,சட்டசபையை கால வரையின்றி ஒத்தி வைத்ததைப் பற்றி குறிப்பிட்டார்.

ஆளும் கட்சியின் சாகசத்திற்கு உதவிடும் வகையில், பின்னர் கவர்னர் சட்டசபையைக் கலைத்ததைப் பற்றியும் குறிப்பிட்டார் தோழர் நிரேன்கோஷ்.

இதை ஆட்சேபித்து ஒரிசா நீதிமன்றத்தில் 74 முன்னுள் எம் எல் ஏக்கள் வழக்குத் தொடுத்தனர். சட்டசபைக்கு மீண்டும் உயிரூட்டக் கோரினர்.

இக்கோரிக்கையை நீதி மன்றம் ஏற்க வில்லையாயினும், ஒரிசாக் கவர்னர் புரிந்த ஜனநாகப் படுகொலையைப் பற்றி சில கருத்துரைகளை வழங்கியது. "ஜனநாயக மரபுகளை" ஒரிசாகவர்னர் கடைப் பிடிக்கத் தவறியுள்ளார்.என்று அதாவது,ஆளும் ஒரு கட்சியின் அமைச்சரவை சட்டசபையில் மெஜாரிட்டி இழந்து விட்ட பின்னர் எதிர்க் கட்சிக்கு அமைச்சரவை அமைத்திடும் அளவுக்கு ஆதரவு உண்டா? இல்லையா? என்பதை கவர்னர் சோதித்துப் பார்த்திருக்க வேண்டும்.

சட்டசபையிலே தான் இதைச் செய்ய முடியும். ஆனல் ஒரிசா கவர்னர் ஜாட்டியோ இந்த ஜனநாயக மரபைப் பின்பற்ற வில்லை. நீதிமன்றத்தின் குற்றச்சாட்டு இது.

இந்தக் குற்றச் சாட்டு பற்றி மந்திய அரசு என்ன பதில் கூறுகிறது என்பது தோழர் நிரேன்கோஷின் கேள்வி.

இது குறித்து மத்திய அரசு "ஆழ்ந்து பரிசீலனை" செய்து வருவதாக உதவி உள்துறை அமைச்சர் மிர்தா பதில் கூறியிருக்கிறார்.

இந்த 'ஆழ்ந்த பரிசீலனை' எப்படி இருக்குமென்பதில் எமக்கு எந்தச் சந்தேகமில்லை. இன்றைய நிலையில் எந்த மாறுதலும் ஏற்படுவதில்லை.

இன்று கவர்னர்களுக்கு வழங்கப்பட்டுள்ள எதேச்சதிகாரங்கள், இன்றைய அரசியல் சட்டத்தின் படி செயல்படும் மாநில சட்டசபைகளை அதிகார மற்ற கொலுப் பொம்மைகளின் கூடாரமாக்கும் சக்திஉள்ளவை என்பது அனுபவப் பூர்வமாக நமக்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

1952-ல் பெப்சு ராஜ்யத்தில் கவர்னர் நடந்து கொண்ட சர்வாதிகாரப் போக்கிலிருந்து,

பிரிக்கப்படாத சென்னை ராஜ்யத்தில் மக்கள் ஜனநாயக முன்னணி அதிகாரத்தில் அமர்ந்துவிடும் ஆபத்தை தடுக்க கொல்லைப்புரமாக ராஜகோபாலாச்சாரியை முதலமைச்சரரகியதிலிருந்து—

1973-ல் உ. பி, யில் ஆளும் கட்சிக்கு சாதகமாக சட்டசபையை ஒத்திவைத்து—பின்னர் முதலமைச்சரை மாற்றி வேருெருவரைப் புகுத்தி, தேர்தல் நடத்தும் சமயத்தையும் தங்களுக்குச் சாதகமாக வைத்து கொண்டது வரை,

மாநில கவர்னர்கள் என்பவர்கள் மத்திய அரசின் ஜனநாயக விரோதக் கருவிகளாகவே செயல்பட்டுவருகின்றனர். பிரிட்டிஷ் ஆட்சிகாலத்திய மாநில சர்வாதிகாரிகளின் மறுபதிப்புகள் தாம் இந்த கவர்னர்கள் முன்பு அவர்கள் பிரிட்டிஷ்மன்னனுக்கு விசுவாசிகளாக இருந்தனர். இன்று மத்திய காங்கிரஸ் தலைவர்களின் எடுபிடிகளாக செயல்படுகிறார்கள். அவ்வளவு தான் வித்தியாசம்.

இதுதான் உண்மை நிலைமை காங்கிரஸ் ஆட்சி நடக்கும்வரை இதில் எந்த மாறுதலும் ஏற்படப் போவதில்லை.

# இந்திய அரசின் 4-வது திட்டம் படுவீழ்ச்சி

இந்திய சர்க்காரால் டமாரமடிக்கப்படும் "திட்டமிட்ட பொருளாதாரம்" என்பதன் (அவ) லட்சணத்தை அவர்களது 4வது 5 ஆண்டு திட்ட முடிவுகள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

### அரசின் ஜம்பம்

நமது பொருளாதார நடவடிக்கைகளுக்கு திட்டமிட்ட பொருளாதாரமே அடிப்படைஎன்று பீற்றிக்கொண்டவர்கள் திட்டமிட்ட பொருளாதாரம் என்பதையே அலங்கோலப் படுத்தி அவமானப்படுத்தும் நிலைக்கு கொண்டுவந்து விட்டார்கள்காங்கிரஸ்ஆள வந்தார்கள்.

திட்டமிட்ட பொருளாதாரத்தில் சோசலிஸ்ட் நாடுகள் திட்டமிட்டதற்கு மேலாகவே முன்னேறுவதால், தானும் சோசலிசப் பாதையில் செல்வதாக மக்களை ஏமாற்றவே, திட்டமிட்ட பொருளாதாரத்தைக் கையாளப்போவதாக இந்திய அரசு ஜம்பம் அடித்தது.

### மயிலாடக் கண்ட வான்கோழி

ஆனல் முடிவோ "கான மயிலாட கண்டிருந்த வான் கோழி—தானும், தன்பொல்லாச்சிறகைவிரித்தாடிற்றே என்ற கதையாகிவிட்டது.

இந்த மானங்கெட்ட ஆளவந்தவர்களின் 4-வது 5 ஆண்டுத திட்டத்தின் குறிக் கோளையும் அதன் சாதனைகளையும்பாருங்கள்.நாட்டின் பொருளாதார முன்னேற்றதிற்கு அத்தியாவசியமான பொருட்களில் ஒன்றறைக் கூட திட்டமிட்டபடி உற்பத்தி செய்ய முடியவில்லை இந்தவாய்வீச்சாளர்களால்.

| | பொருள் | திட்டத்தின் குறி | திட்டத்தின் சாதனை |
|---|---|---|---|
| 1 | உணவுத் தானியம் | 12 கோடியே 90 லட்சம் டன் | 11 கோடியே 14 லட்சம் டன் |
| 2) | அரிசி | 5 கோடியே 20 லட்சம் டன் | 4 கோடியே 4 லட்சம் டன் |
| 3) | சிமிண்ட் | 1 கோடியே 80 லட்சம் டன் | 1 கோடியே 16 லட்சம் டன் |
| 4) | மைல்டு எஃகு | 81 லட்சம் டன் | 54 லட்சம் டன் |
| 5) | வனஸ்பதி | 62 லட்சத்து 50 ஆயிரம் டன் | 57 லட்சத்து 50 ஆயிரம் டன் |
| 6) | பெட்ரோலியப் பொருட்கள் | 2 கோடியே 60 லட்சம் டன் | 2 கோடியே 15 லட்சம் டன் |
| 7) | பெட்ரோலியம் க்ரூடு | 85 லட்சம் டன் | 77 லட்சம் டன் |
| 8) | காகிதப் பத்திரிகை | 1 லட்சத்து 50 ஆயிரம் டன் | 43 ஆயிரம் டன் |
| 9) | உரங்கள் | 34 லட்சம் டன் | 10 லட்சத்து 51 ஆயிரம் டன் |
| 10) | மின்சாரம் | 86 ஆயிரம் கோடிமெகாவாட் | 72 ஆயிரம் கோடி மெகாவாட் |
| 11) | வர்த்தக வாகனங்கள் | 85 ஆயிரம் | 47 ஆயிரம் |

இவ்விவரத்தை கவனித்தால் 4 வது 5 ஆண்டுத் திட்டம்படுதோல்வி என்பது மட்டுமல்ல, 5 வது 5 ஆண்டு திட்டத்தையும் சுடுகாட்டுக்கு அனுப்ப ஏற்பாடாகி விட்டது என்றும் அர்த்தமாகும்,

### 5 வதுதிட்டம் என்னவாகும்?

ஏனெனில், திட்டமிட்ட குறியை அடைவதில் அரசாங்கந்தான் தோற்றதேயொழிய, இந்நாட்டு பெரு முதலாளிகள் அவர்களது கொள்ளை லாப வேட்டையில் தோற்கவில்லை. கள்ளப் பணமாகவும், கறுப்பு பணமாகவும், வெள்ளைப் பணமாகவும் கொள்ளையடித்துக் கொண்டனர்.

மேலும் கறுப்பு பணமும், பதுக்கல் இவைகளின் செல்லப்பிள்ளையான விலைவாசி உயர்வும் நின்றபாடில்லை. அதற்கான திட்டமும் இல்லை. எனவே, 5-வதுத் திட்டமும் வெற்றி பெறப்போவதில்லை.

## சங்கச் செயலாளரை நீக்க வேண்டுமாம்

### ஏ.ஜி. ஊழியர்கள் சங்கத்துக்கு மத்திய அரசின் தாக்கீது!

திருவனந்தபுரம் டிச 18— திருவனந்தபுரம் அக்கவுண்டன்ட் ஜெனரல் அலுவலக ஊழியர்கள் மீது மத்திய அரசு அக்கவுண்டன்ட் ஜெனரலும் போட்டி போட்டு அடக்குமுறை நடவடிக்கைகளை ஏவி விடுகின்றனர்.

ஊழியர்களின் சங்கச் செயலாளராக தோழர் என் பி. திரிவிக்கிரமன்பிள்ளை இருந்து வருகிறார். இவர் ஏ ஜி அலுவலக ஊழியராக இருந்து 2 வருடங்களுக்கு முன் டிஸ்மிஸ் செய்யப்பட்டவர்.

டிஸ்மிஸ் செய்யப்பட்ட ஊழியரை சங்கச் செயலாளராக வைத்திருக்கக் கூடாது என்றும் அவரை நீக்கி விடுமாறும் இல்லையென்றால் சங்கத்தின் அங்கீகாரம் ரத்து செய்யப்படுமென்றும் தற்பொழுது மத்திய அரசு, ஊழியர்கள் சங்கத்துக்கு தாக்கீது அனுப்பியுள்ளது.

1973 பிப்ரவரி மாதத்தில் ஊழியர்கள் சங்கத்துக்கும் நிர்வாகத்துக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையை அக்கவுண்டன்ட் ஜெனரல் இதுவரையிலும் அமுல் படுத்தவில்லை. பல முன்னணி ஊழியர்களும் வருடக்கணக்காக சஸ்பென்சனில் நிற்கின்றனர்.

### சதித் திட்டம்

மேலும் 6 முன்னணி ஊழியர்களை டிஸ்மிஸ் செய்யவும் ஏ ஜி திட்டமிட்டுள்ளாராம்.

இந்தப் பிரச்சனைகளால் திருவனந்தபுரம் அக்கவுண்டன்ட் ஜெனரல் அலுவலகத்திலும் அதன் ஒரு பிரிவான திருச்சூரிலும் எங்நேரமும் ஊழியர்களின் போராட்டம் வெடிக்கக் கூடிய நிலை ஏற்பட்டுள்ளது

இந்தப் போராட்டத்தை உடைக்கும் நோக்குடன் தான் ஊழியர்களின் ஒப்பற்ற தலைவரான தோழர் என் பி திரிவிக்கிரமன் பிள்ளையை சங்கச் செயலாளர் பதவியிலிருந்து நீக்க மத்திய அரசு தாக்கீது அனுப்பியுள்ளது என்று தெரிகிறது.

மத்திய அரசின் இந்த பாசிசத்தன்மை கொண்ட செய்கைக் கெதிராகஎல்லா தொழிற் சங்கங்களும், ஜனநாயக வாதிகளும் குரல் எழுப்ப வேண்டுமென்றும் அக்கவுண்டன்ட் ஜெனரல் அலுவலக ஊழியர்கள் சங்கம் வேண்டுகோள் விடுத்துள்ளது.

## நியாய விலையில் உரம், பூச்சி மருந்து வழங்கக் கோரி

### மயிலம் வட்டாரத்தில் இளைஞர்கள் சைக்கிள் யாத்திரை

மயிலம்,(தெ.ஆ) டிச.16— மண்ணெண்ணெய் மீது விதிக்கப்பட்ட வரியை ரத்து செய்யக் கோரியும், விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தக் கோரியுமான கோரிக்கை அட்டைகள் தாங்கிய சைக்கிள்களில், இங்குள்ள இளைஞர்நற்பணி மன்றத்தைச் சேர்ந்த 10 இளைஞர்கள் சுமார் 25-க்கும் மேற்பட்ட கிராமங்களுக்குகாக சைக்கிள் யாத்திரை யொன்று நடத்தினர்.

கிராமங்கள் தோறும், மத்திய மாநில அரசுகளின் மக்கள் விரோதக் கொள்கைகளைக் கண்டித்தும், விவசாயிகளுக்கு நியாய விலையில் உரம் பூச்சி மருந்து விநியோகிக்கக் கோரியும், விவசாய உற்பத்திப் பொருள்களுக்கு நியாய விலை வழங்கக் கோரியும் கோஷங்கள் எழுப்பிச் சென்றனர்.

அத்துடன் கடந்த நவம் 3-ம் தேதி மயிலத்தில் ஒன்று [illegible] மூலம் மண்ணெண்ணெய் லிட்டர் 72பைசாவுக்கு கிடைதஅனுபவத்தை விளக்கும் துண்டு பிரசுரத்தையும் விநியோகம் செய்து, அது போன்று ஒன்றுபட்ட இயக்கம் நடத்த முன் வரும்படி அழைப்பு விடுத்தும்தனித்து நிர்ப்பதால் எந்தப் பயனும் கிடைக்கப் போவதில்லை. ஒன்று படுவதால் மாத்திரமே பிரச்சனைகளைத் தீர்க்க முடியும் என்பதை விளக்கியும் பிரச்சாரம் செய்தனர்.

கிராமங்கள் தோறும் விவசாயிகள் சங்கம் கட்டுங்கள் இளைஞர்களே 'இளைஞர்மன்றம் அமையுங்கள்' என்றும் கேட்டுக் கொண்டனர்.

யாத்திரை முடிந்து மறு நாள் (டிச 10-ம் தேதி) மயிலத்தில் பொதுக் கூட்டமும் ஊர்வலமும் நடைபெற்றன.

ஊர்வலத்தில் ஏராளமான விவசாயிகளும் இளைஞர்களும் கலந்து கொண்டனர். ஊர்வலம் கோஷங்களுடன் இளைஞர் நற்பணி மன்றப் படிப்பகத்தை திறந்து வைத்து—வான வேடிக்கைகள் வெடிக்க 'அகில இந்திய விவசாயிகள் சங்கம் வாழ்க!' விவசாயத் தொழிலாளர் ஒற்றுமை ஓங்குக! என்ற முழக்கத்துடன் பொதுக் கூட்ட மேடையை அடைந்தது.

கூட்டத்திற்கு 'விவசாய சங்கத் தலைவர்' எ. நடேசக் கவுண்டர் தலைமை வகித்தார்.

கோ. எழுமலை, வெங்கிடேசன், அப்பாத்துரை தண்டபாணி, கருணமூர்த்தி ஆகியோர் 'கிராமப்புற விவசாயப் பிரச்சனைகளை குறித்துப்பேசினர்கள், புதுகுப்பம் விவசாயிகள் சங்க சார்பில் தோழர்கள் ஆர். இளங்கோவனும், கோ ராமசாமியும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினர்கள்.

இளைஞர் நற்பணி மன்றச் செயலாளர் ஆர் மணி நன்றி தெரிவித்துப் பேசும் போது, கிராமத்திலுள்ள மற்ற இளைஞர்களும் இது போன்ற முயற்சிக்கு ஆர்வத்தோடு முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

## தமிழக விவசாய சங்க மாநாடு

# பழனி வட்டம் ஆயக்குடி தயாராகி விட்டது

ஆயக்குடி, டிச 18— பழைய ஆயக்குடியில் தோழர் வி மாரிமுத்து தலைமையில்விவசாயகள் சங்கத் தொண்டர்களும், மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்களும் கலந்து கொண்ட கூட்டம் கடந்த 10-ந் தேதி நடைபெற்றது.

இக்கூட்டத்தில் இன்றைய மத்திய மாநில அரசுகளின் முதலாளித்துவ ஆதரவு கொள்கையால் எப்படி விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும், விலைவாசி உயர்வாலும், வேலையில்லாத் திண்டாட்டத்தாலும், புதிய வரிக் கொடுமையாலும், பீடித்து கொடுமைமைப் படுகிறார்கள் என்பது பற்றியும் தாலுகா விவசாயிகள் சங்க உபதலைவர் தோழர் என். பழனிவேல் விளக்கினர். இம்மாதிரி நேரத்தில் நமது விவசாய சங்க மாநில மாநாடு பழனியில் நடப்பதை அதிவிமர்சையாக நடத்த நமது ஆயக்குடியின் பங்கு சிறப்பாக இருக்க வேண்டும் என்பதையும் அவர் வலியுறுத்திப்பேசினர்.

இறுதியாக, தோழர்கள் பி வள்ளிமுத்து எம் வெள்ளைச்சாமி, டி. பால்ராஜ், சி. பால்ராஜ், ஆர். விஜயன் ஆகியோர் கொண்ட செந்தொண்டர் படைக் குழு அமைத்து 50-க்கும் மேற்பட்ட தொண்டர்கள் தினமும் மாலையில் பயிற்சி பெற்று வருகின்றனர்.

ஆயக்குடி பகுதி முழுவதும் சுவர்களில் மாநாட்டு விளம்பரங்கள் எழுத தோழர்கள் வி. பாலசேகர் பா. கிருஷ்ணன், கே. சின்னத்துரை, பி களஞ்சியம், என்.மணி,சி.பால்ராஜ் ஆகியோர் கொண்ட குழுவினர் ஆயக்குடி பகுதி முழுவதும் சுவர்களில் தினமும் எழுதி வருகின்றனர். ஊர்வலத்துக்கு 50-க்கும் மேற்பட்ட மாட்டு வண்டிகள் தயார் செய்து ஊர்வலந்துக்கு பெண்களை திரட்டி வரவும் தோழர்கள் ஆர் சந்தனம், பா.காளிமுத்துவும்கொண்ட குழு அமைத்து அவர்களும் வண்டி வைத்திருக்கும் விவசாயிகளை அணுகி ஜனவரி 6-ம் தேதி நடக்கும் பேரணிக்கு விவசாயிகளைத் திரட்டும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

வார்டு வாரியாக உண்டியல் வசூல் செய்வதென்றும் அதற்கு தோழர்கள் எம் தங்கவேல், ஆறுமுகக் கவுண்டர், ப. பெருமாள், பிச்சை, எம் பழனிச்சாமி, பெரியமுத்து க பச்சைமுத்து, ரா பெருமாள், தன்ஞசி என். கருப்புசாமி என் சுப்பிரமணி, பெ பெரியசாமி, சி தெய்வநாயகம் பி திருமாணிக்கம் ஆகியோர் கொண்ட குழு ஒவ்வொரு வார்டுக்கும் பொறுப்பேற்று உண்டியல் வசூல் செய்யவும், ஒத்துக்கொண்டுள்ளனர். மாநாட்டு செலவுகளுக்குஆயக்குடியின் பங்காகரூபாய் ஆயிரம் வசூல் செய்து மாநிலமையத்திற்கு கொடுப்பது என்றும் அதற்காக தோழர்கள் என் பழனிவேல் ஆர் சந்தனம் மற்றும் 7 பேர் கொண்ட வசூல் கமிட்டியும் அமைக்கப்பட்டது.

கூட்டத்தில் இருந்த தோழர்கள் ஒவ்வொருவரும் கோட்டா எடுத்துக்கொண்டனர். அதன் மூலம் ரூ 404 தருவதாக ஒப்புக் கொண்டு அந்த இடத்திலேயே ரூ 69 கொடுத்தனர்.

பின்னர் ஒருமுறை வசூல் செய்து குமரி மாவட்ட அரசு பஸ் தொழிலாளர் போராட்ட நிதியாக ரூ.8. 38 நாகர்கோவிலுக்கு அனுப்பி வைக்கப்பட்டது.

பொது நிதி வசூல் செய்யும் போது தோழர் ஆர். ராமராஜ அல்லது வி எ கருப்புச்சாமியை இரண்டு நாட்கள்அழைத்துக்கொள்வதென்றும் முடிவு செய்யப்பட்டது.

## விபச்சார விடுதி நடத்தியதாக அதிகாரி கைது

புதுடெல்லி, டிச. 18— புதுடெல்லியில் விபச்சார விடுதி நடத்தி வந்ததாக, தீயணைப்புப் படை அதிகாரியும், அவரது மனைவியும் நேற்று கைது செய்யப்பட்டனர்.

தீயணைப்புப் படை நிலைய கட்டிடத்தில் அந்த அதிகாரியின் குடியிருப்பில் போலீசார் சோதனையிட்டு அவர்களை கைது செய்தனர். அதிகாரியின் வீட்டிலிருந்து, ஆந்திர பிரதேசத்தைச் சேர்ந்த 4 பெண்களை போலீசார் மீட்டனர்.

பெண்களை ஏமாற்றித் திருமணம் செய்து அவர்களை டெல்லிக்கு கொண்டு வந்து விபச்சார விடுதிக்கு அனுப்பிவிடும் ஒருவனையும் போலீஸ் தேடி வருகிறது.

## தமிழ்நாடு கிராம சேவக்குகள் சங்கம்

மதுரவாயல், டிச. 12— செங்கற்பட்டு மாவட்ட கிராம சேவக்குகளுக்கு செய்ய வேண்டிய நிர்வாக வேலைகளில் ஏற்பட்டுள்ள தேக்கம், பதவிஉயர்வு காலி இடங்களை நிரப்பாமை; முறை கேடான பதவி உயர்வுகள் முதலிய பிரச்சனைகளின் மீதும், கிராம சேவக்குகளில் நீண்ட நாளைய கோரிக்கையான பெயர் மாற்றம், 1:1 பதவி உயர்வு; நிர்ணய பயணப்படி உயர்வு; தேர்வு நிலை பதவி உயர்வு; அடிப்படைச் சம்பள உயர்வு போன்ற பிரச்சனைகளின் மீதும். நிர்வாக சீர்திருத்தக் குழுவின் பரிந்துரைகளின் மீதும் தாலுகா வாரியான கூட்டங்கள் நடத்தப்பட்டது- இக் கூட்டங்களில் மாவட்ட துணைத் தலைவர் திரு. காயாம்பூவும்; செயலாளர் திரு. புலிவீரனும் கலந்து கொண்டு விளக்கவுரையாற்றினர்.

மாவட்டப் பிரச்சினைகளின் மீது ஆர்ப்பாட்ட ஊர்வலம நடத்துவதைப் பற்றி எல்லா கூட்டங்களிலும் ரகசிய வாக்கெடுப்பு நடத்தப் பட்டது. ஆஜர் அங்கத்தினர்களில் 100க்கு 100 பேரும் சில இடங்களில 100க்கு 95 முதல் 99 பேர் வரையிலும் போராட்டம் வேண்டும் என்று வாக்களித்தனர். தாலுகா வாரியாக போராட்ட நடவடிக்கை குழு உறுப்பினர்களாக கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருத்தணி. திரு. தங்கவேல், திருவள்ளூர் சனர்த்தனம், சைதாப்பேட்டை தேவநேசன், பொன்னேரி, ராமையா, ஸ்ரீ பெருமந்தூர் அண்ணமலை, காஞ்சீபுரம் சடையப்பன், மதுராந்தகம் சகாதேவன், செங்கற்பட்டு இருதயராஜ்.

## உப தேர்தலில் இ.காங்கிரஸ் தோல்வி

இந்தூர். டிச. 18— மத்திய பிரதேச மாநிலத்தில் மோவ் என்ற அசெம்பிளித் தொகுதியில் நடைபெற்ற உப— தேர்தல் ஒன்றில் ஜனசங்க வேட்பாளரிடம் காங்கிரஸ் கட்சியின் வேட்பாளர் தோல்வி அடைந்தார்.

ஏற்கனவே ம பி முதலமைச்சர் சேத்தி. மோவ் தொகுதியிலிருந்தும் உஜ்ஜயினி தொகுதியிலிருந்தும் காங்கிரஸ் வேட்பாளராக வெற்றி பெற்றிருந்தார். அவர் உஜ்ஜயினி தொகுதியின் எம் எல் ஏவாக முடிவு செய்து கொண்டதால மோவ் வொகுதிக்கு தேர்தல் நடைபெற்றது.

காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்ற தொகுதியாக இருந்தும்கூட இந்த உப-தேர்தலில் 4813 வோட்டு வித்தியாசத்தில் தோற்றது.

## லீ-டக்-தோ பாரிஸ் சென்றார்

ஹனேய், டிச. 17— வட வியட்நாமின் தலைவர் லீ-டக்-தோ பாரீஸ் சமாதான ஒப்பந்தத்தை அமுல் நடத்துவது சம்பந்தமாக பேச்சுவார்த்தை நடத்த, பாரிசுக்கு புறப்பட்டுச் சென்றார். செல்லும் வழியில் பீகிங்கிலும் மாஸ்கோவிலும் தங்கினர்.

# இந்திரா சோஷலிஸ விந்தைகள்!

★ "16 மத்திய அமைச்சர்கள் சென்ற 2 மாத காலத்தில் வெளிநாடுகளுக்குச் சென்றதற்காக செலவிட்ட தொகை 28 லட்சம் ரூபாய்!"

—சர்ச்லைட்(பாட்னு)தின இதழ்

★ சென்ற 6 மாத காலத்திற்கான மகாராஷ்டிர அமைச்சர்களின் 'டெலிபோன்' பில் தொகை எவ்வளவு தெரியுமா? 40 ஆயிரம் ரூபாய்! அமைச்சர்களின் சிக்கனமான வாழ்வு எப்படி இருக்கிறது என்று பாருங்கள்"

—'கரண்ட்' வார இதழ்

★ 55 மத்திய அமைச்சர்களின் பாதுகாப்புக்காக 398 போலீசார் நிரந்தரமாக நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்காக வருடா வருடம் செலவாகும் தொகை 9 லட்சம் ரூபாய்!

—பிளிட்ஸ் வார இதழ்

★ மத்திய அரசின் விளம்பரத்துறை, ஏராளமான பத்திரிகைகளை பிரசுரிக்கின்றது. சென்ற 3 வருட காலத்தில் இந்த வெளியீடுகளால் அரசுக்கு ஏற்பட்ட நஷ்டம் 12 லட்சம் ரூபாய்!

—பாஞ்சஜன்யம் இந்தி வார இதழ்

## காகித தட்டுப்பாடு மாணவர்களையும் பாதிக்குமாம்

புதுடில்லி, டிச. 18—

இன்றுள்ள பத்திரிக்கை காகிதத் தட்டுப்பாடு தொடர்ந்து நீடிக்குமானல் கல்வி ஸ்தாபனங்களால் வெளியிடப்படும் மாணவர்களுக்குரிய டெக்ஸ்ட் புத்தகங்களும், பயிற்சிப் புத்தகங்களும்கூட பாதிக்கப்படக் கூடும் என உதவி கல்வி அமைச்சர் யாதவ் பார்லிமெண்டில் தெரிவித்தார்.

### எப்போது நீங்கும்?

மேலும், எழுதுவதற்குரிய, அச்சடிப்பதற்குரிய பத்திரிக்கைகளின் உற்பத்தியைப் பெருக்க தொழில் வளர்ச்சி அமைச்சரவையில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுக்கொண்டிருக்கின்றன என்றும் தெரிவித்தார்.

## காகிதத் தட்டுப்பாட்டுக்கு அரசாங்கம் பொறுப்பில்லையாம்

### மத்திய அமைச்சர் அறிவிப்பு

சண்டிகார், டிச. 18—

இன்றுள்ள பத்திரிகை காகித தட்டுப்பாட்டு நிலைமையில் முன்னேற்றம் ஏற்பட இன்னும் குறைந்தது. 4 ஆண்டுகளாவது பிடிக்கும் என, மத்திய செய்தித்துறை அமைச்சர் குஜ்ரால் நிருபர்களிடம் அறிவித்தார்.

இன்றைய பத்திரிகை காகிதத் தட்டுப்பாடு அரசாங்கத்தால் ஏற்பட்டதில்லையாம்.

அரசாங்கமோ அல்லது அரசு வர்த்தக கழகமோ பத்திரிகை காகிதங்களை இறக்குமதி செய்யவில்லை என்றும் அரசு வர்த்தக கழகம், ஏஜென்சிகளை முறைப்படுத்தும் பொறுப்பை மட்டும் கொண்டிருக்கிறது என்றும், அவர் தெரிவித்தார்.

மேலும்,தனிப்பட்ட பத்திரிக்கைகளால்தான் பத்திரிகை காகிதம் இறக்குமதி செய்யப்படுகிறது.

ஸ்காண்டி நேவியன் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதாக இருந்த பத்திரிகை காகித முழு அளவை சில செய்திப்பத்திரிகைகள் இறக்குமதி செய்யவில்லை. 35 ஆயிரம் டன்னிற்குப் பதிலாக 13 ஆயிரம் டன் காகிதங்களே இறக்குமதி செய்துள்ளன. எனவே, பத்திரிகை காகிதக் கட்டுப்பாடு இன்னும் கடுமையாகும் என அமைச்சர் குஜ்ரால் கூறினர்.

மேலும் இந்தியாவில் உள்ள பத்திரிகை தொழில்கள் கஷ்டத்தில்தான் இருக்கின்றனயொழிய நெருக்கடியில் இருக்கவில்லை என்றும் ஜம்பம் அடித்துக் கொண்டார்.

## மத்திய அரசு - மாநில அரசு ராஜமன்னர் குழு அறிக்கை

புதுடில்லி, டிச. 18—

தி மு க பார்லிமெண்ட் மெம்பர் தண்டாயுதபாணி என்பவரின் கேள்வி ஒன்றுக்கு மத்திய உள்துறை அமைச்சர் தீட்சித் பதிலளிக்கையில் "மத்திய—மாநில அரசு உறவுகள் பற்றி ஆராய்ந்த ராஜமன்னர் கமிட்டி மத்திய அரசால் நியமிக்கப்பட்டதல்ல. தமிழக அரசால் நிறுவப்பட்டது.

எனவே மத்திய அரசு அக்கமிட்டியின் முடிவுகளை பரிசீலனை செய்ய வேண்டியதில்லை. மத்திய—மாநில அரசுகளிடையே உள்ள உறவுக்கு தற்போதைய அரசியல் சட்டம் போதுமானதே என முடிவு செய்த நிர்வாக சீர்திருத்தக் கமிஷனின் (மத்திய அரசால் நியமிக்கப்பட்டது) ரிப்போர்ட்டைத் தான் மத்திய அரசு பரிசீலிக்கும். அதன் மீது மாநில அரசுகளின யோசனைகளை தெரிந்து கொண்ட பிறகு நிர்வாக சீர்திருத்தக் கமிஷன் ரிப்போர்ட் இறுதியாக்கப்படும்" என்று கூறியுள்ளார்.

### கருணநிதி தயரா?

மாநில சுயாட்சி பற்றி வாய்ப்பந்தல் அடிக்கும் கருணநிதிக்கு ஒரு சந்தர்ப்பம்.

இவரது மாநிலசுயாட்சிக் கோரிக்கைகளை வலியுறுத்தவும் மத்திய அரசின் அதிகாரங்கள் மாநிலங்களுக்கு பரவலாக்கப்பட வேண்டும் என்பதை வற்புறுத்தவும் கருணநிதிக்கு ஒரு வாய்ப்பு.

"எடுத்துக் கூறுவோம்' 'குரல் கொடுப்போம்'என்று வெறும் வார்த்தைகளால் விளையாடுவது மட்டுமல்லாமல் மாநில சுயாட்சிக்காக மத்திய அரசோடு போராடுவோம் என்ற நிலை எடுக்க கருணநிதி தயாரா?

### கையெழுத்திட்ட வீரர்

தூத்துக்குடியில் அனல் மின்சாரம் அமைக்கப்பட வேண்டும் என்றும் நெய்வேலியில் இரண்டாவது சுரங்கம் வெட்டப்பட வேண்டும் என்றும் மத்திய அரசாங்கத்திடம் கேட்டிருந்தும் 5-வது திட்ட நகலில் அக்கோரிக்கைகள் சேர்க்கப்படவில்லையென முழங்கி விட்டு கடைசியில் சப்தம் இல்லாமல் 5-வது திட்ட நகலை அங்கீகரித்து கையெழுத்து போட்டு விட்டார் இந்த மாநில சுயாட்சி வீரர் கருணநிதி.

இவரா மாநில சுயாட்சிக்காக மத்திய அரசை எதிர்ப்பார்?

# 'கெட்ட குமாரன் கதை'

'கெட்ட குமாரன் கதை' என்று பைபிளிலே ஒரு கதை உண்டு,

தந்தையிடம் சண்டை போட்டுச் சொத்துக்களை பிரித்துக் கொண்டுபோன தனயன் தீய வழிகளில் அவற்றைத் தீர்த்துக் கட்டி விட்டு, திக்கற்றவனக மீண்டும் தந்தையிடமே திரும்பி வரும்போது,அவனை நிராகரிக்காமல், இரு கை நீட்டி வரவேற்று ஏற்றுக் கொள்ளும் விசால மனம் படைத்த பெற்றவனைப் போலவே, மனந்திருந்தி வரும் பாவிகளை ஏற்றுக் கொள்ளும் அருளாளனக 'ஆண்டவன்' இருக்கிருன் என்பதை அறிவுறுத்தவே இந்தக் கதையாம்.

ஆண்டவனுக்கு அந்தப் பண்பு உண்டோ இல்லையோ ஒரு அப்பனுக்கு இருக்கக்கூடும் என்பது இயற்கைதான்.

இந்திய இடதுசாரி அரசியல் எட்டாண்டுகளுக்கு முன்பு ஒரு 'கெட்ட குமாரனைப்' பெற்றுப் போட்ட சங்கதி நம் அனைவருக்கும் தெரியும். அந்த 'கெட்ட குமாரன்' 'இந்திர மோகத்துக்கு'இரையாகி, டாட்டாவின் அரசியல் புத்தகத்தை லெனினிசத்தால் 'ரேப்பர் பைண்டிங்' செய்து மலிவான ஆபாசச் சரக்குகளுக்குச் 'சிவப்பு' முத்திரை குத்தி, கம்யூனிசத்துக்குள் கலப்படச் சரக்குகளைத் திணித்துக்கொண்டு ஏக அமர்க்கலம் பண்ணித் தன் 'சிவப்புத் துண்டு' விசுவாசத்தைக் காட்டிய போதிலும்—'சிவப்பால்' கிடைத்த மேக்-அப்பால் ஜனங்களின் சீற்றத்தைத் தடுக்க முடியவில்லை என்றுணர்ந்த பிர்லாப் பேரரசு.

'சத்திய மூர்த்தி பவனும்' 'தீன் மூர்த்தி பவனும்' தங்கள் 'ஊடலை' முடித்துக் கொள்ள வேண்டிய தேவையை உணர்ந்து கொண்டது!

### ஐயோ பாவம்!

காளித் தெய்வத்தின் 'சிவப்பு' விழிகளைப் பார்த்து மருண்டு, காமராஜரும்—ராஜாஜியும் தான் தங்கள் காவல் தெய்வங்களாக இருப்பார்கள் எனக் கணக்கிட்ட கோயங்காக்கள் நெஞ்செல்லாம் குளிரும்படி காளித் தெய்வம் என்பதே அவர்கள் காவல் தெய்வமாக இருப்பதற்காக எடுத்த இடைத் தேர்தல் அவதாரம்தான் என்பதை 71-ம் ஆண்டிலேயே ஏகபோகங்கள் புரிந்து கொண்டன. ஆனல் இடதுசாரி கட்சிகள் புரிந்து கொள்வதில் தான் இன்னும் ஏராளமான தயக்கம் தெரிகிறது. அதிலும் நமது மாட்சியை தாங்கிய வலதுகள் ......ஐயோ, பாவம் அவர்கள் நொந்து போய்க் கிடக்கிருர்கள்!

" சிண்டிக் கேட்டிலேயே காமராஜர் ஒருவர்தான் முற்போக்கானவர்; எனவே அவர் முற்போக்கு முகாமுக்கு வருவதை வரவேற்போம்" என்று அவர்கள் தேசியக் கவுன்சிலில் ஒரு கருத்து வந்ததாம்.

இந்திரா—காமராஜர் இணைப்பை எப்படியேனும் நியாயப் படுத்த சித்தாந்த சிம்பு ஒன்றை தேடினுர்களாம்! அசோக்மேத்தா, பாடடில், நிஜலிங்கப்பா ஆகியோரின் ஆசியோடு தான் 'காமராஜர் இணைப்பு' நடந்தேறியது என்பதை அவர்களிலேயே ஒருவர் சுட்டிக் காட்டித் "தெளிவான பிற்போக்காளர்களின் திட்டமிட்ட முயற்சி இது" எனக் கூறி தமிழ் நாட்டு வலதுகளை மேலும் சங்கடத்துக் குள்ளாகிக் விட்டார்களாம!

மொத்தத்தில் இந்த 'முற்போக்கு' ஏஜண்டுகள் மூன்று வார காலமாக முக்காடு போட்டுக் கொண்டு நடமாட வேண்டியதாகி விட்டது! என்ன கஷ்ட காலம! ஹரே கல்யாண்! ஹரே கிருஷ்ண!

### இரங்கத்தக்க ஊழியர் நிலை

இதிலே நமது அனுதாபம் முழுவதும் வலது வழியை இனறும விசுவாசித்துக் கொண்டிருக்கும் அதன உண்மை ஊழியர்கள் மீது தான்!

பாவம்! அவர்கள்தலைமையால் அவர்கள் பயங்கரமாக ஏமாற்றப்பட்டிருக்கிருர்கள். எடுத்ததெற்கெல்லாம்மார்க்ஸையும்,லெனினையும் மேற்கோள் காட்டி அந்த நிழலுக்கடியில் நிர்வாணத்தை மறைத்துக் கொள்வதும் வலதுதலைமை இண்டிகேட்டின் சிண்டிகேட் 'காதலை' எந்த இலக்கியத்தால் புனிமைப்படுத்துவது என்று திணறுகிருர்கள்.

'சிவப்பு விளக்கு' ஏரியாவின் சிக்னல் லைட்டை, கண்ணகி ஏந்திய தீச்சுடர் என்று தம் சீடர்களை நம்பச் சொன்னவர்கள், இன்று தம் சித்தாந்தக் கப்பலை சோனவதிக்'கப்பலைப்போல் சூறைக்கு காற்று முன் கை விட்டுவிட்டு, சுரு மீன்களுக்கிடையில் தொண்டர்களை தத்தளிக்க விட்டிருக்கிருர்கள்.

அப்படித் தத்தளிக்கும் போதுதான் தமது தவறுகள் சில பேருக்குத் தென்படக்கூடும். 1—12—73 'சாந்தி' (வலதுகளின் பத்திரிகை) அதற்கு சரியான சான்று. அதிலிருந்து சில சாம்பிள்;

### 5 சாம்பிள்கள்

1) "புதுவை மாநிலத்தில் சட்டமன்ற இடைத் தேர்தலில் இந்திரா கட்சிக்கு ஆதரவு தருவதன் மூலமாகத் தனது எண்ணத்தை வெளிப்படுத்த காமராசருக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது" (அரியாங்குப் பத்துக்காகக் காமராசரை

### தணிகைச் செல்வன்

பலமுறை மோகன்குமாரமங்கலம் சந்தித்த கதை இங்கே இருட்டடிப்பு செய்யப்பட்டு விட்டது)

சாம்பிள் 2)

"கேரள பாணியில் பிற்போக்கு எதிர்ப்பணி ஆட்சியைக் கைப்பற்றும் 'அபாயம்' இங்கு ஏற்பட்டு விட்டது என காமராஜர்களும், கருணநிதிகளும், பக்தவச்சலங்களும் மட்டுமல்ல —**இந்திராக்களும்** எண்ணத் தொடங்கி யிருக்கிருர்கள்."

(கேரளபாணி இந்திராவின் பாணிதான்; இந்திராவுக்கு எதிரானபாணிஅல்ல. திண்டுக்கல் பாணி என்று சொல்லியிருந்தால் பொருத்மாயிருக்கும்.)

சாம்பிள் 3)

"இந்திரா கட்சிக்குள் இந்திராவின் அனுதாபமும் ஆதரவும் பிற்போக்கு சக்திகளுக்குக் கிடைத்து வருகின்றன என்பதைக் கம்யூனிஸ்ட் கட்சி ஏற்கெனவே தெளிவாக மதிப்பிட்டிருக்கிறது,"

(மதிப்பீட்டு என்னபயன்? மேறகு வங்க பந்துக்குப் பயந்து பொந்து தேடி ஒளிந்து கொள்ளத்தான் உங்கள் மதிப்பீடு பயன்பட்டிருக்கிறது.)

சாம்பிள்: 4)

"இந்திரா கட்சிக்குள் முற்போக்குச் சிந்தனைகளை பரப்பச் செயலபட்டு வந்த சோஷலிச அரங்கை கலைப்பதில் பிற்போக்கு சக்திகளின் நேரு அரங்கிற்கு **இந்திரா சார்பாக** நின்றதை மறுத்து விட முடியாது"

(சோஷலிசச் சிந்தனைகளைப் பரப்புவது அந்த அரங்கின் நோக்கமல்ல இந்திரா கட்சியின் சோஷலிசப் பொய்த் தோற்றத்தைத் தருவதற்கே அந்த அரங்கு பயன்பட்டது.)

சாம்பிள்: 5)

"மாற்று அணியாகத் தங்களைத் தயார் செய்து கொள்ள காமராஜர் கட்சியும் இந்திராகட்சியும்உடன்பாடு கண்டிருக்கின்றன. **ஏகபோகங்களின் நலன்களை பாதுகாக்க** இன்று இந்த அணி அவசியமாகி விட்டது."

### பிரிந்ததும் இணைவதும் ஒரே காரணத்துக்குத் தான்

மெத்தசரி! ஏகபோகங்களின நலனைக் காக்க இன்று ஒன்று படுவது எப்படி அவர்களின் அவசியமாகிறதோ,அதேபோல் தான் அன்று ஏகபோகங்களைக் காக்க **பிரிந்து** நிற்பதும் அவசியமாகியிருந்தது—1970 ல் பிரிந்து நின்ற போதும் பிர்லாக்கள் தான் பயனடைந்தார்கள் என்பதை மக்கள் புரிந்து கொள்ளத் துவங்கியதும், முன்போலவே இணைந்து நின்று ஏகபோகங்களைக் காப்பது காங்கிரசின் அவசியமாகிவிட்டது!

இதை இரண்டு ஆண்டுகளுக்கு முன்னல் மார்க்சிஸ்ட் கட்சி கூறியபோது ஏளனம் பேசியவர்கள்- 'இவர்களுக்கு மார்க்சிசமும், புரியாது; மாவோயிசமும் புரியாது' என்று மண் வாரித் தூற்றியவர்கள்- அந்த மகத்தான குற்றத்துக்குத் தங்களையே ஆட்படுத்திக் கொண்ட கேவலத்தைக் காட்டி கேலி செய்கின்ற அற்பத் திருப்தியில் நாங்கள் ஆத்ம திருப்தி அடைவதில்லை.

'சாந்தியிலே' அரையும் குறையுமாக உண்மையின் பக்கம் நெருங்கி வருகிற வலது கட்சியின் அணிகளை ஜனநாயக இயக்கம் கைநீட்டி வரவேறகிறது.

'கெட்ட குமாரன் கதை' பைபிலுக்கு மட்டுமல்ல. அரசியலுக்கும் பொருந்தும்.

இந்தியஅரசியலில் அடிப்படையான மாறுதலைக் குறிக்கோளாகக் கொண்ட ஜனநாயகப்புரட்சியின் கடமைகளைக் காலந்தாழ்ந்தாவது உணரத் தொடங்குவது அனைவருக்குமே நல்லது—குறிப்பாக வலதுகளுக்கு.

## சங்கரன்கோவிலில் பொதுகூட்டம்

சங்கரன்கோவில். டிச. 18—

விலைவாசி உயர்வை எதிர்த்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சிஐடியூ சார்பில் இங்கு பொதுக் கூட்டங்கள் நடந்தன.

10.ந் தேதியன்று திருவேங்கடம் சாலைத்தெருவில் நடந்த பொதுக்கூட்டத்துக்கு தோழர் டி. ஆர்.ஆறுமுகம் தலைமை வகித்தார். மாவட்டச் செயலாளர் சு. பாலவிநாயகம், உதவிச் செயலாளர் எம். பாண்டியன். கே. கந்தசாமி, ஆர். எஸ். முப்பிடாதி ஆகியோர் பேசினர்.

12-ந் தேதியன்றுஅண்ணநகரில் சிஐடியூ சார்பில் நடந்த பொதுக்கூட்டத்துக்குதோழர் பி. சுப்பையா தலைமை வகித்தார். தோழர்கள் ஏ. லெட்சுமணன். பி. வேலு, மாரியப்பன். எஸ். சண்முகவேலு. ஆர் சுப்பராயலு, கணபதி, எஸ். முப்பிடாதி, டி. ஆர், ஆறுமுகம், கே. கந்தசாமி, ஆர். எஸ். முப்பிடாதி) எம். பாண்டியன் ஆகியோர் பேசினர்.

இக்கூட்டத்தில், கைத்தறி விசைத்தறித் தொழிலாளர்களின் பிரச்சினைகள் குறித்தும். போலீஸ் தொடுத்துள்ள பொய்வழக்குகளை வாபஸ் பெறக் கோரியும் வற்புறுத்தப்பட்டது.



## திருவனந்தபுரம் சட்டக் கல்லூரியில் எஸ் எப் ஐ வெற்றி

திருவனந்தபுரம், டிச. 18—

திருவனந்தபுரத்திலுள்ள அகாடமி சட்டக் கல்லூரி, அரசு சட்டக் கல்லூரி ஆகிய இரு கல்லூரிகளிலும் நடைபெற்ற மாணவர் பேரவைத் தேர்தல்களில் இந்திய மாணவர் சங்கம் (எஸ். எப். ஐ) வெற்றி வாகை சூடியுள்ளது.

லா அகாடமி சட்டக் கல்லூரியில் எஸ். எப். ஐ. தனித்தும், இந்திரா காங்கிரஸ் — வலது கம்யூனிஸ்ட் மாணவர்கள் கூட்டணியமைத்தும் போட்டியிட்டனர்.

ஆனல் மொத்தமுள்ள 10 ஜெனரல் சீட்டுகளிலும் எஸ். எப். ஐ. மாணவர்கள் வெற்றி பெற்றனர்.

அரசு சட்டக் கல்லூரியில் பேரவைச் செயலாளராக தோழர் நந்த குமார், கலைக்குழு செயலாளராக தோழர் அகமதுகுஞ்சு, மூட்கிளங் செயலாளராக தோழர் ராதாகிருஷ்ணன் ஆகியோர் பெருவாரியான வாக்குகள் வித்தியாசத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## கேரள நூல் நிலைய ஆட்சிக் குழு தேர்தல் மார்க்சிஸ்ட் தோழர்கள் வெற்றி

திருவனந்தபுரம்,டிச 18—

கேரள நூல்நிலைய சங்க ஆட்சிக் குழுவுக்கான தேர்தலில் மார்க்சிஸ்ட் தோழர்கள் வெற்றி பெற்றுள்ளனர்.

'தேசாபிமானி' ஆசிரியர் தோழர் பி. கோவிந்தப் பிள்ளை, மார்க்சிஸ்ட் எம். எல். ஏ. க்களான தோழர்கள் பி. ஜி. புருஷோத்தமன்பிள்ளை, ஆர். பரமேஸ்வரன்நாயர் உட்பட6தோழர்கள்வெற்றி பெற்றனர்.

தற்போதைய நூல் நிலைய சங்கத்தலைவர் பி. டி. பாஸ்கரப்பணிக்கர், தோல்வியடைந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்.

## காங்கிரஸ் அலுவலகத்திலிருந்து வெளி மாநில ஊழியர்கள் வெளியேற்றப்பட்டனர்

பம்பாய், டிச. 15—

வேலைவாய்ப்புத்துறைகளில் 'மண்ணின் மக்களுக்கு மட்டும் வேலை' (அந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களுக்கு மட்டும்) என்ற கொள்கையை மகாராஷ்டிர அரசு அங்கீகரித்துள்ளதல்லவா.

இந்தக் கொள்கை, முதன் முதலாக மகாராஷ்டிர மாநில காங்கிரஸ் கமிட்டி அலுவலகத்தில் அமுல்படுத்தப்பட்டுள்ளது.

இந்த அலுவலகத்தில் வேலை பார்க்கும் 32ஊழியர்களில் 10 பேர் மகாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல என்ற காரணங் காட்டி வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளனர். இந்த 10 பேர்களில் தமிழ்நாடு, கேரளம், ஆந்திரா, மைசூர், கோவா ஆகிய மாநிலங்களைச் சேர்ந்தவர்கள் உள்படுவர்.

தேசீய ஒருமைப்பாடு வாழ்க!!

# நாறிப்போன காங்கிரசுக்கு வக்காலத்து வாங்குவதா?

"தாங்கமுடியாத துன்பங்கள் ஏற்படக்காரணம் காங்கிரஸ் அரசாங்கம் தான். ஏற்கெனவே அறிவித்திருந்த கொள்கைகளை அமுல்படுத்தாது விட்டதோடு. ஏற்றுக்கொண்ட கொளகைகளிலிருந்து பின் வாங்கி, செயலற்றுபோய், ஏகபோகங்கள் நிலப்பிரபுக்கள் ஆகியோரின் நிர்ப்பந்தங்களுக்கு அடி பணிந்து போனதேயாகும்."

— (ஜனசக்தி தலையங்கம் 16—12—73)

தேசியக் கவுன்சில் தீர்மானம் என்ற பெயரில் இந்திரா காங்கிரசுக்குவலதுஏடு வாங்கும் வக்காலத்து இது. அவர்களின் வாதப்படியே வைத்துக் கொண்டாலும்,

**இந்திராகாங்கிரஸ் அறிவித்த கொள்கைகளை ஏன் அமுல்படுத்த வில்லை?**

**ஏற்றுக்கொண்ட கொள்கையிலிருந்து ஏன் பின்வாங்கியது?**

நாடாளுமன்றத்திலே மெஜாரிட்டி இல்லையா?
தீர்மானம் போட்டு கை தூக்க ஆள் போதவில்லையா?
கையெழுத்து போட கிரி மறுத்து விட்டாரா?
ஏன் பின்வாங்க வேண்டும்?
பிற்போக்கு பட்டில் கூட்டம் குறுக்கே வந்து படுத்ததா?
மொரார்ஜி பாய் மறியல் நடத்தினரா?
ராஜாவின் கூஜா காமராஜ் குறுக்கே நின்ருரா?

ஏகபோகம் மிரட்டியதாம்!
நிலப்பிரபுத்துவம் நிர்ப்பந்தித்ததாம்!!
அரசாங்கம் செயலற்றுப் போனதாம்!!!

கேப்பையிலே நெய் வடிகிறது...... கேளுங்கள்...... என்று கதைக்கிறது, வலது ஏடு.

ஏகபோகங்களின், நிலப்பிரபுக்களின் நிர்ப்பந்தங்களுக்கு அடிபணிகிற அளவுக்கு இந்திரா சர்க்கார் செயலளவில் என்ன முற்போக்கு திட்டத்தை அமுல்படுத்த முனைந்தது?

ஏகபோகங்களின் மூலதனங்களை பறிமுதல் செய்ததா?
அன்னிய பாங்குகளை தேசியமயமாக்க வந்ததா?
எண்ணெ கம்பெனிகளை ஏற்றுக்கொள்வேன், என்றதா?
சர்க்கரைஆலைகள் நாட்டுடைமை என்று அறிவித்ததா?
கூலி விவசாயிகளுக்கு, நில வினியோகம் செய்ய வந்ததா?

இதிலே எதைச் செய்யப் போய் இந்திரா சர்க்காரை, ஏகபோகிகள் நிர்ப்பந்தித்தார்கள்?

நிலப்பிரபுக்கள் கத்தியைக்காட்டி மிரட்டினார்களா?

ஒருவேளை...

தேர்தல் காலத்தில் இந்திரா காங்கிரசுக்கு கோடிக்கணக்கில் கொட்டியழுத, காசுக்கு கைமாருக கோட்டா, லைசென்சு கேட்டு, மிட்டா—மிராசுகள் அன்புடன் மிரட்டியிருக்கலாம்! ஏகபோகங்கள் உரிமையுடன் உருட்டியிருக்கலாம்!

மிரட்டப்படுவதாக வலதுகள் கூறுகிறதைப் பற்றிஇந்திரா காங்கிரஸ் மூச்சுவிடக் காணுமே?

காங்கிரஸ் உணர்வு பூர்வமாக ஏகபோகத்திற்கு சேவை புரிவதை எத்தனை ஜால வித்தைகள் புரிந்தாலும் மறைத்துவிட முடியாது

# கோவை மில் தேர்தலில் சி ஐ டி யூ, ஏ ஐ டி யூ சி வேட்பாளர் கூட்டு வெற்றி

கோவை, டிச. 18—

இங்குள்ள ரங்க விலாஸ் மில்லில் நடந்த கான்டீன் கமிட்டித் தேர்தலில் கூட்டாகப் போட்டியிட்ட சி ஐ டி யூ, ஏ ஐ டி யூ சி வேட்பாளர்கள் வெற்றி பெற்றனர்.

பஞ்சாலைக் கார்ப்பரேசன் ஏற்று நடத்தும் இந்த மில்லில்உள்ள கேண்டீனின் 2 இடங்களுக்கு கடந்த 15-ந் தேதி தேர்தல் நடந்தது.

கூட்டாகப் போட்டியிட்ட சி ஐ டி யூ வேட்பாளர் கிருஷ்ணன் 380 வாக்குகளும், ஏ ஐ டி யூ சி வேட்பாளர் செங் காளியப்பன் 388 வாக்குகளும பெற்று வெற்றி பெற்றனர்.

எதிர்த்து போட்டியிட்ட வேட்பாளர்கள் தோல்வியுற்றனர் அவர்கள் வாக்குகள் வருமாறு:-

| | |
|---|---|
| மாரியப்பன் [இண்டிகேட்] | 328 |
| ரெங்கநாதன் (எச் எம் எஸ்) | 278 |
| கந்தசாமி (தி மு க) | 99 |
| சுப்பையா ( ,, ) | 107 |

இத்தேர்தலில் தனியாகப் போட்டியிட்ட சிண்டிகேட், பின் வாபஸ் வாங்கிக் கொண்டு இண்டிகேட், எச் எம் எஸ் வேட்பாளர்களை ஆதரித்து வேலை செய்தது.

### சி ஐ டி யூ வளர்கிறது

இந்த மில்லில் சிறியசங்கமாக இருந்த சி ஐ டி யூ, பஞ்சாலைக் கார்ப்பரேசன்ஏற்று நடத்த ஆரம்பித்தபின், தொழிலாளர்களின் உரிமைகளுக்காக போராட்டங்களை நடத்தி பலம் பெறறு வளர்ச்சியடைந்தது. சில மாதங்களுக்கு முன்புநடந்த ஒர்க்ஸ் கமிட்டித் தேர்தல்களிலும் சி ஐ டி யூ வேட்பாளரே வெறறி பெற்ருர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒப்பந்தத்தை மீறும் மத்திய அரசு நடவடிக்கையினுல்

# லோகோ ஊழியர்களின் வேலைநிறுத்தம் பரவுகிறது

## தென் ரயில்வேயில் எந்நேரமும் வேலைநிறுத்தம் வெடிக்கும்

புதுடெல்லி, டிச. 18—

10 மணி நேர வேலை என்பது உள்பட ஆகஸ்ட் 13-ம் தேதி கையெழுத்தான உடன்பாட்டை அமுல் படுத்தக்கோரிவட ரயில்வேயிலும். மேற்கு ரெயில்வேயிலும்துவங்கியுள்ளலோகோ ஊழியர்களின் வேலை நிறுத்தம் எந்த நேரமும் தென் ரெயில்வேயிலும் வெடிக்கும் சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது.

வட ரெயில்வேயில் 4-வது நாளாக லோகோ தொழிலாளர்களின் வெற்றிகரமான வேலை நிறுத்தம் நடைபெற்றது. வேலை நிறுத்தத்தை உடைக்க மத்திய அரசு எல்லைப் படையைக் குவித்துள்ளது.

வட ரெயில்வே, லோகோ தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தால் முடங்கிவிட்ட நிலையில் உள்ளது.

டெல்லி, புதுடெல்லி, லட்சுமணபுரி, கான்பூர், பிகானீர். அலகாபாத், தண்ட்லா, ஜோத்பூர் ஆகிய இடங்களிலெல்லாம் ரெயில் போக்குவரத்து சீர் குலைந்து விட்டது.

வேலை நிறுத்தத்தை உடனடி பேசி முடிப்பதற்குப் பதிலாக ரயில்வே அமைச்சகம் ஜனவரி மாதத்தில் ஊழியர், நிர்வாக உறவை பலப்படுத்துவதற்காக மாநாடு நடத்தப் போகின்றதாம்.

ஒப்பந்தப்படி 10 மணி நேர வேலை என்பதை ஒப்புக் கொண்ட ரயில்வே அமைச்சர் 10 மணி நேர வேலையை அமுல்படுத்த 3 வருடங்களாகும் என்று இப்பொழுது அறிவித்துள்ளார்.

### மனோரஞ்சன்ராய் கண்டனம்.

சி. ஐ. டி. யூ. தலைவரும், ராஜ்யசபா உறுப்பினருமான தோழர் மனோரஞ்சன்ராய், ரெயில்வே நிர்வாகத்தின் தொழிலாளர் விரோதப் போக்குக்கு ராஜ்யசபாவில் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளார். இரயில்வே இலாகாவில் 10 ஆயிரம் தற்காலிகத் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்து விட்டு ஆயிரம் அதிகாரிகளுக்கு பதவி உயர்வு அளித்த நிர்வாகத்தின் நடவடிக்கையையும் தோழர் ராய் கண்டித்தார்.

லோகோ ஊழியர் போராட்டம் பற்றி விவாதிக்க நேரம் ஒதுக்கும்படி நாடாளுமன்றத்தில் தோழர் ஜோதிர் மாய் பாசு கோரிக்கை வைத்தார். அதற்கு சபாநாயகர் ஜி. எஸ். தில்லன் அனுமதி மறுத்து விட்டார்.

ரயில்வே நிர்வாகத்தின் போக்கை, நாடாளுமன்றத்தில் தோழர் பிரேன் தத்தாவும் கடுமையாகக் கண்டித்தார்.

### பரவும் நிலை.

வேலை நேரம் 10 மணியாகக் குறைக்க வேண்டும், சமவேலைக்கு சமசம்பளம், பழிவாங்கும் நடவடிக்கைகளை கைவிட வேண்டும். போன்ற 6 கோரிக்கைகளை உடனடியாக அங்கீகரிக்கவில்லையென்ருல் 75 ஆயிரம் லோகோ ஊழியர்கள் கூட வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவர் என்று லோகோ ஓடும் தொழிலாளர் தலைவர் எம். ரத்ன சபாபதியின் அறிவிப்பையொட்டி தென் ரெயில்வேயிலும் வேலை நிறுத்தம் எந்நேரமும் வெடிக்கும் சூழ்நிலை உருவாகியுள்ளது:

### பி ராமமூர்த்தி சி சுப்ரமணியம் சந்திப்பு

சி ஐ டி யூ பொதுச் செயலாளர் தோழர் பி. ராமமூர்த்தி நேற்று கோவையில் மத்திய அமைச்சர் சி. சுப்ரமண்யத்தை சந்தித்து ரெயில்வே ஊழியர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றுவதற்கான ஏற்பாடுகளை மத்திய அரசு கையாள வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

## கோவைத் தேர்தல்

# மார்க்சிஸ்ட் வேட்பாளருக்கு சோசலிஸ்ட் முன்னணி டெபாசிட் கட்டுகிறது

கோவை. டிச. 18—

வரும் பிப்ரவரியில் நடக்கவிருக்கும் கோவை நாடாளுமன்றத் தொகுதி உபதேர்தலில் போட்டியிடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளருக்கான டெபாசிட் தொகையை "சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி" கட்டுகிறது.

அண்மையில் நடைபெற்ற கோவை—நீலகிரி மாவட்ட சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் மாவட்டக் குழுக்கூட்டத்தில் இதற்கான முடிவு செய்யப்பட்டது.இக்கூட்டத்துக்கு முன்னணியின் செயற்குழு உறுப்பினர் தோழர் எஸ். சுப்ரமண்யம் தலைமை வகித்தார்.

முன்னணியின் இயக்க வேலைகள் பற்றிய அறிக்கையை மாவட்டச் செயலாளர் தோழர் கே சி கருணாகரன் சமர்ப்பித்தார்.

அறிக்கையை மீதான விவாதத்திற்குப் பின், கோவை நாடாளுமன்ற உப—தேர்தல் குறித்து பரிசீலித்துகீழ்காணும் முடிவு எடுக்கப்பட்டது.

சரித்திரத்தில் என்றுமில்லாத அளவிற்கு விலைவாசியை உயர்த்தியும், வேலையின்மையைப் பெருக்கியும், நாட்டு மக்களை நரக வாழ்க்கையில் தள்ளியுமுள்ள மத்திய மாநில அரசுகளையும் அவற்றை ஆளும் இந்திரா காங்கிரஸ், திமுக முதலிய கட்சிகளையும் எதிர்த்து,நாடு முழுவதுமுள்ள-நெருக்கடிக்குள்ளான மக்கள் போராடி வருவதும், 71-ம்ஆண்டில் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ருமல் இந்திரா காங்கிரசும் அதைஆதரித்த கட்சிகளும் உடைந்து சின்னபின்னப்பட்டு, முரண்பாட்டு முச்சந்திக்கு வந்து நிற்பதுமான சூழ்நிலையில், கோவை நாடாளுமன்றத்துக்கான உப—தேர்தல் நடைபெற உள்ளது.

இந்தத் தேர்தலில் மத்திய ஆளும் காங்கிரசையும்,அதனுடன் இணைந்துள்ள சிண்டிகேட் காங்கிரசையும் திமுக கட்சியையும் இதர பிற்போக்குச் சக்திகளையும் எதிர்த்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிடுவதென தீர்மானித்து, தொகுதியில் வேலைகள் நடைபெற்று வருகின்றன.

அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த இத் தேர்தலில் வாலிபர் முன்னணியின் பிரதான கடமையையும், பொறுப்பையும் நிறைவேற்றும் வகையில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வெற்றிக்குத் தேவையான அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்ள மாவட்டக் குழு முடிவு செய்துள்ளது.

தேர்தல் வேலைகள் அனைத்திலும் வாலிபர் முன்னணித் தோழர்கள் ஆயிரக்கணக்கில் பங்கெடுத்துச் செயல்படுவதுடன், வேட்பாளருக்கான பொறுப்பு (டெபாசிட்) தொகையைக் கட்டுவதற்கும் மாவட்டக் குழு முடிவு செய்துள்ளது-

மறியலில் சிறை சென்றுள்ள

# சி ஐ டி யூ அதிமுக தோழர்கள் அமோக வெற்றி

## சிங்கை ஸ்டோர் தேர்தல் முடிவு

விக்கிரமசிங்கபுரம், டிச. 17—

விக்கிரமசிங்கபுரம்ஹார்வி மில் ஸ்டோர் டைரக்டர் பதவிக்கு நடைபெற்ற தேர்தலில் சி ஐ டி யூ, அதிமுக வேட்பாளர்கள் சுமார் 1000 வாக்குகள் வித்தியாசத்தில் அமோக வெற்றி பெற்றுள்ளனர்.

தொழிலாளர்களுக்கான இந்த ஸ்டோரில் 6500 பேர் உறுப்பினர்.

1—1—74முதல் 31—12—76 வரை 3 ஆண்டுகளுக்கான 2 டைரக்டர்கள் ஸ்தானத்திற்கு 16—12—73ல்தேர்தல் நடைபெற்றது. சி ஐ டி யூ சங்க உதவிக் காரியதரிசி தோழர் ஆர் பொதிகாசலமும், அ தி மு க தொ;சங்க உப தலைவர் நீ. கணேசனும் கூட்டாகப்போட்டியிட்டார்கள்.

ஏற்கனவே ஸ்டோரை நிர்வகித்து வரும் பி எல் யூ சங்கத்தின் சார்பில் திரு சூர்யகாந்தியும், திருபாக்கிய முத்துவும் போட்டியிட்டார்கள். வீவிங் தொழிலாளர் சங்கம் மட்டும் நடுநிலைமை வகித்தது. ஏ ஐ டி யூ சியினர் நாம் ஜெயித்து விடக் கூடாதெனவும். நமது அபேட்சகர்களை தோற்கடிக்கவும் மறைமுகமாக வேலை செய்தனர்.

பி எல் யூ சங்க அங்கத்தினர்கள் 2000 பேர்கள், இத்துடன், ஐ என் டி யூ சி (700 அங்கத்தினர்) எச் எம் எஸ் (400 அங்கத்தினர்கள்) ஏ எல் யூ(400 அங்கத்தினர்) டி எம் கே (300 அங்கத்தினர்கள்) இத்துடன் தேசீய மில் தொழிலாளர் சங்கம் (300)மற்றும் பல சங்கங்கள் அனைத்தும் பி எல் சி நிறுத்திய அபேட்சகர்களை ஆதரித்தும் நம்மைதோற்கடிக்கவும் வாக்குகளைச் சேகரீத்தார்கள். சங்கங்கள் அனைத்தும் வேண்டுகோள் விட்டும், வாக்காளர்களை நேரடியாக சந்தித்து வாக்குகளை கோரியும்கூட சிங்கைத் தொழிலாளர்கள் இவர்களின் வேண்டுகோளை புறக்கணித்து விட்டார்கள். போராடும் ஸ்தாபனமான சி ஐ டி யூ, அ தி மு தொ. சங்க அபேட்சகர்களை 1000 க்கு அதிகமான வாக்கு வித்தியாசத்தில் தேர்ந்தெடுத்தனர்.

### வாக்கு விபரங்கள்

| | |
|---|---|
| பதிவான வாக்குகள் | 4904 |
| நீ கணேசன் அதிமுக | 2905 |
| ஆர் பொதிகாசலம் சிஜடியூ | 2889 |
| பாக்கிய முத்து பிஎல்யூ | 1920 |
| சூர்யகாந்தி " | 1918 |
| செல்லாதது | 74 |
| உபயோகிக்காதது | 102 |

வெற்றிபெற்றஇருஅபேட்சகர்களும் ஹார்வி மில் போராட்டம் சம்பந்தமாக அம்பாசமுத்திரம் வட்டார ஆட்சித் தலைவர் ஆபீஸ் முன்பு நடைபெற்ற மறியல் சம்பந்தமாக 12—12—73ல் கைது செய்யப்பட்டு பாளையங்கோட்டை மத்திய சிறையில் காவலில் உள்ளார்கள்.

இந்த தேர்தல் முடிவு தொழிலாளர்களிடம் உற்சாகத்தையும்,இதரசங்கங்களுக்கு பலமான அதிர்ச்சியையும் கொடுத்துள்ளது.

மில் நிர்வாகத்திற்கும் பலமான அதிர்ச்சி ஏற்பட்டுள்ளது.

# பஸ் கட்டண உயர்வை எதிர்த்து

## மதுரை தாலுகாவில் ஆர்ப்பாட்டங்கள்

மதுரை, டிச. 18—

பஸ் கட்டண உயர்வை எதிர்த்து மதுரை தாலுகா வெங்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகட்சி தலைமையில் ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன.

திருப்பரங்குன்றத்தில் தோழர் நாகலிங்கம் தலைமையில் ஜனநாயக வாலிபர் சங்க அலுவலகத்திலிருந்து ஊர்வலம புறப்பட்டு நான்கு வீதிகள் வழியாக வந்து திருப்பரங்குன்றம் பஸ் நிலையத்தை அடைந்ததும் அங்கு ஆர்ப்பாடட்ம் நடத்தப்பட்டது. தோழர் கந்தசாமி ஆர்ப்பாட்டத்தை நோக்க விளக்கிப் பேசிய பின்பு தோழர் எம், ஏ. கந்தசாமி நன்றி கூறினர். ஆர்ப்பாட்டதத்தில் மாணவர்களும் மாதர்களும் கலந்துகொண்டார்கள்.

### ஒத்தக்கடை

மாலை 5 மணிக்கு நரசிங்கம் விவசசய சங்க அலுவலகத்திலிருந்து பஸ் கட்டணஉயர்வை எதிர்த்து ஊர்வலம் தோழர்கள் எம். கணபதி, ஆர். வெள்ளை, பி. கருப்பையா ஆகியோர் தலைமையில் புறப்பட்டது. பெண்களும் கலந்து கொண்டனர்.

நூற்றுக்கு மேற்பட்டோர் ஊர்வலத்தில் வந்தனர். மாயாண்டிபட்டி- ஒத்தக்கடை நரசிங்கம் மறறுமுள்ள கிராமங்களிலிருந்து பலர் கலந்து கொண்டனர் ஒத்தக்கடையில் இரண்டு பஸ் ஸ்டாப்புகளில் ஆர்ப்பாடடங்சள நடந்தன. ஆர்ப்பாட்டத்தை விளக்கி தோழர் எம.கணபதிமதுரை தாலுகா கமிட்டி செயற்குழு உறுப்பினர் பேசினர்.

### பி. பி. சாவடி

காலை 10 மணியளவில் பி.பி. சாவடி மக்கள் படிப்பகத்திலிருந்து சுமார் 50 தோழர்களுக்கு மேல் ஊர்வலமாக கோஷமிட்டு அரசரடி பஸ் ஸ்டாப் முன்பு 40 நிமிடங்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர். முடிவில் தோழர் எம். பிச்சைமணி தலைமையில் தோழர்கள் பி. என். மணி, பி. சக்திவேல் ஆகியோர் விளக்கமாக உரையாற்றினர்கள். ஆர்ப்பாட்டத்தினை நூற்றுக்கணக்கில் பொது மக்கள் திரண்டு பார்த்து ஆதரவு தெரிவித்தனர்.

### அவனியாபுரம்

16—12—73 காலை 11 மணியளவில் அவனியாபுரத்தில் தியாகிகள் மன்றத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, முக்கிய வீதிகள் வழியாக வந்து அவனியாபுரம் பஸ் நிலையத்தின் முன்பு ஆர்ப்பாட்டம் நடந்தது.

தோழர் கே சுப்பையா நோபிநாத், என் சுந்தரம், தலைமையில் ஆர்ப்பாட்டம் நடந்தது,

ஆர்ப்பாட்டத்தின் முடிவில் தோழர் கே சுப்பையா பேசினர். ஊர்வலத்தில் 50 பேர் கலந்து கொண்டார்கள். பஸ் நிலையத்தில் ஏராளமான மக்கள் கூடி நின்று ஆதரவு கொடுத்தார்கள்.

# மாணவர் சங்க தோழர் மறைவு

இந்திய மாணவர் சங்கத்தின் (எஸ் எப் ஐ) தஞ்சை மாவட்டக் குழு உறுப்பினரும், மன்னைத் தாலுகாக் குழுத் தலைவரும் துடிதுடிப்பான, இளைஞருமான தோழர் ஆர் அண்ணாதுரை காலமானுர் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். அவருக்கு வயது. 25.

ஒரு மாதகாலமாக நோய் வாய்ப்பட்டு தஞ்சை அரசு மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்த அவர் கடந்த 13ந் தேதியன்று காலமானுர். மறைந்த தோழர் மீது மார்க்சின்ஸ் கட்சியின் தாலுகாக் குழு சார்பில் ஏ. நடராஜன் செங்கொடி போர்த்தி மலர் மாலை அணிவித்து அஞ்சலி செலுத்தினர். மற்றும் கட்சிக்கிளைகள், மாணவர் சங்கம், மாதர் சங்கம் ஆகியவற்றின் சார்பிலும் மலர் மாலைகள் அனுவித்து அஞ்சலி செலுத்தப்பட்டது.

தோழர் அண்ணாதுரை அவரது சொந்த ஊரான கண்டிதம் பேட்டையில் அடக்கம் செய்த பின்பு நடந்த இரங்கற் கூட்டத்திற்கு தோழர் ஏ நடராஜன் தலைமை வகித்தார்.

வழக்கறிஞர் ஆர். ரெங்கன், பரத்துவாசன், இளங்கோவன், உலகநாதன், அறிவழகன், பி. வெங்கடேசன், என் ஆர். ரெங்கராசு, என். கோவிந்தராசு, தங்கவேல், ஆர். கே. கணேசன், ஜி. ஆறுமுகம். டி. கோதண்டம், எஸ். ரெங்கசாமி ஆகிய அனைத்துக் கட்சிகளையும் சார்ந்த பிரமுகர்கள் அனுதாபம் தெரிவித்துப் பேசினர்.

# தென்காசி மின் ஊழியர்கள் கோரிக்கை ஊர்வலம்

தென்காசி. டிச. 18—

இங்குள்ள மின் வாரியத் தொழிலாளர்கள் கடந்த 10ந் தேதியன்று, தங்களது 20 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தி ஆர்ப்பாட்ட ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்தினர்.

தென்காசி சந்தை பஜாரில் சி ஐ.டி.யூ.கொடியைதோழர் பி. சி. வேலாயுதம் ஏற்றி வைத்த பின்பு கோரிக்கை முழக்கங்களை எழுப்பிக் கொண்டு முக்கிய வீதிகள் வழியே லஜபதி திடலை வந்தடைந்தது.

ஊழியர் சங்கத் தலைவர் எம். வீரப்பன் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் ஊழியர்சங்கப்பொதுச்செயலாளர் பி.சி. வேலாயுதம் நிர்வாகக் குழு உறுப்பினர் கே. செந்திவேல், பொதுக் குழு உறுப்பினர் எம். வேதமாணிக்கம், திட்டச் செயலாளர் வை.கணபதிராமன், தாலுகா விவசாயிகள் சங்கப் பொதுச் செயலாளர் சி.காளிமுத்து, மாவட்ட ஐக்கிய தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் ஏ. எம். சுப்பையா முதலிய தோழர்கள் 20 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்திப் பேசினர்'

மேலும் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தக்கோரியும், குமரிமாவட்ட போக்குவரத்து, சிங்கை மில்தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்கக் கோரியும். 52 மின்சாரத் தொழிலாளர்கள் மீது போடப்பட்டுள்ள வழக்கை வாபஸ் பெறக் கோரியும். மாணவர்கள் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவித்தும், தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# பொய் வழக்கு விடுதலை

குழித்துறை, டிச. 19—

மார்க்சிஸ்ட் தோழர்கள் மீது அருமனை போலீசார் தொடுத்த பொய் வழக்கை தள்ளுபடி செய்து குழித்துறை மாஜிஸ்திரேட் தீர்ப்பு கூறினர்.

விளவங்கோடு தாலுகா மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் ஏ. எஸ். கிருஷ்ணன் குட்டி, தாலுகா கமிட்டி உறுப்பினர் தோழர் மஞ்சாலுமூடு நடராஜன் கோபால கிருஷ்ணன், நாராயணன்,சைலஸ்ஆகிய தோழர்கள் மீது குட்டைக் கோடு கருணை காஷ்யூஆலை தொழிலாளர் போராட்டத்தின் போது அருமனை சப்இனஸ்பெக்டர் பொய் வழக்குத் தொடர்ந்தார்.

வழக்கை விசாரித்த குழித்துறை மாஜிஸ்டிரேட் வழக்கு நிரூபிக்கப்படவில்லை என்று தோழர்களைவிடுதலை செய்தார்.

அருமனை சப்இன்ன்பெக்டர் மீது மானநஷ்ட வழக்கு தொடுப்பதற்கான ஏற்பாடுகளை விடுதலையான தோழர்கள் நடத்தி வருகின்றனர்.

# கன்சிலியேசனில் கலந்து கொள்ளும் தொழிற்சங்க பிரதிநிதிகளுக்கு சம்பளத்துடன் லீவு வசதி

## தொழிற் சங்கங்களுக்கு லேபர் கமிஷனர் கடிதம்

தொழிலாளர் பிரச்சினைகள் சம்பந்தமாக தொழிலாளர் நல இலாகா முன்பு நடக்கும் சமரசப் பேச்சுவார்த்தைகளில் (கன்சிலியேசன்ஸ்) கலந்து கொள்ளும். தொழிற்சங்கப் பிரதிநிதிகளுக்கு லீவு வசதி அளிப்பது பற்றி லேபர் கமிஷனர்கீழ்வரும் கடிதத்தை தொழிற்சங்கங்களுக்கு அனுப்பியுள்ளார்.

**B. L. No· 102179/73 தேதி 29—11—73**

தொழிலாளர்—தொழிலாளர் ஆலோசனைக் குழு கூட்டம் — தொழிலாளர் இலாகா முன்பு நடத்தும் வழக்குகளில் கலந்து கொள்ளும் தொழிலாளர் பிரதிநிதிகளுக்கு லீவு வசதி அளிப்பது பற்றி.

இத்துடன் குற்ருலத்தில் 1973 ஜுலை 26, 27, 28ல் கூடிய தொழிலாளர் நல ஆலோசனைக் குழுவின் கடந்த கூட்டத்தில் மேற்கூறிய பிரச்சினையில் எடுக்கப்பட்ட முடிவை உங்களுடைய தகவலுக்காக அனுப்பியுள்ளேன்.

ஒப்பம், லேபர் (கமிஷனருக்காக)

"லேபர் இலாகா அதிகாரிகள் முன்பு நடக்கும் பேச்சுவார்த்தைகளில் தொழிலாளர் பிரதிநிதிகள் பங்கு பெறும்போது, அவர்களுக்கு லீவு வசதி அளிப்பது பற்றி"

"லேபர்இலாகா முன்பு நடக்கும் சமரசப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொள்ளும தொழிற்சங்க நிர்வாகிகள், சம்பந்தப்பட்ட தொழிற்சாலையில் வேலை செய்து வந்தால், ஒவ்வொரு தகராறின் பேச்சு வார்த்தை போது 3 நாட்கள் சம்பளத்துடன் விசேஷ காலன் லீவு அளிக்கப்படும். ஒரே ஒரு தொழிற் சங்கம் மட்டுமே இருந்தால் 2பிரதிநிதிகளுக்கும், ஒன்றுக்குமேற்பட்ட பல தொழிற்சங்கள் இருந்தால் சங்கத்திற்கு ஒரு பிரதிநிதி வீதம் அதிக பட்சம் 4 பேர்களுக்கு என்று கட்டுப்படுத்தப்படும்."

இதன்படி, பேச்சு வார்த்தையின் போது கலந்து கொள்ளும் தொழிற் சங்கப் பிரதிநிதிகள் லீவு வசதிகள் பெறலாம்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை-18)அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.